ஈ.வே.ராமசாமி நாயக்கரின்

# மறுபக்கம்

ம.வெங்கடேசன்



விஜயபாரதம் பதிப்பகம்

ஈ.வே.ராமசாமி நாயக்கரின்

# மறுபக்கம்

ம.வெங்கடேசன்



விஜயபாரதம் பதிப்பகம்

# <u>பெரியாரின் மறுபக்கம் –</u>

# <u>ம வெங்கடேசன்</u>

**பெரியாரின் மறுபக்கம் – பாகம் 1 (தமிழ்மொழி வெறுப்பு)**

**ஈ.வே. ராமசாமி நாயக்கர் தமிழரா?**

*ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஒரு தமிழர், தமிழ் மொழிக்காக அரும்பாடுபட்டவர் என்றெல்லாம் இன்று ஈ.வே. ராமசாமி நாயக்கரின் அடிவருடிகள் சொல்லிக் கொண்டு தமிழருக்காகவே வாழ்ந்தவர் அவர் என்ற பொய்த் தோற்றத்தைத் தமிழகத்திலே உருவாக்கி வந்தனர். இன்னும் உருவாக்கி வருகின்றனர். ஆனால் 'தமிழர் தலைவர்' என்றெல்லாம் ஈ.வே. ராமசாமி நாயக்கரை சொல்கின்றார்களே – அந்த ஈ.வே. ராமசாமி நாயக்கர் தன்னைப் பற்றி அறிமுகப்படுத்திக் கொண்டது எப்படித் தெரியுமா?*

*"கண்ணப்பர் தெலுங்கர், நான், கன்னடியன், தோழர் அண்ணாத்துரை தமிழர்" (பெரியார் ஈ.வே. ரா. சிந்தனைகள் – முதல் தொகுதி)*

*என்றும்,*

*"நான் கர்நாடக பலிஜவார் வகுப்பைச் சேர்ந்தவன்" (குடியரசு 22.08.1926)*

*என்றும் தன்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறார்.*

'நான் கன்னடியன்' என்று தம்மைப் பெருமையோடு சொல்லிக் கொண்டவரைத்தான் 'தமிழர்' என்றும், 'தமிழர் தலைவர்' என்றும் சொல்லிக் கொண்டிருக்கின்றனர்.

'நான் கன்னடியன்' என்று சொல்லிக்கொண்ட ஈ.வே. ராமசாமி நாயக்கர் தமிழ்ப் புலவர்களை விமர்சித்த விமர்சனங்கள் கொஞ்சநஞ்சமல்ல.

தமிழ் புலவர்களைப் பற்றிய விமர்சனம்:

'தமிழும் தமிழரும்' என்ற நூலில் ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறுகிறார்:

"இன்று தமிழ் உலகில் தமிழ்ப்புலவர்களில் இரண்டு மூன்று புலவர்களின் பெயர்கள் அடிபடுகின்றன. அவர்கள் 1. தொல்காப்பியன், 2. திருவள்ளுவன், 3. கம்பன்.

*இம்மூவரில்,*

*1. தொல்காப்பியன் ஆரியக்கூலி, ஆரிய தர்மத்தையே தமிழ் இலக்கணமாக செய்துவிட்ட மாபெரும் துரோகி.*

*2. திருவள்ளுவன் அக்காலத்திற்கு ஏற்ற வகையில் ஆரியக் கருத்துக்கு ஆதரவு கொடுக்கும் அளவில் பகுத்தறிவைப் பற்றி கவலைப்படாமல் நீதி கூறும் முறையில் தனது மத உணர்ச்சியோடு ஏதோ கூறிச்சென்றான்.*

*3. கம்பன் இன்றைய அரசியல்வாதிகள் – தேசபக்தர்கள் பலர்போல் அவர் படித்த தமிழ் அறிவை தமிழர் எதிரியாகிய பார்ப்பனருக்கு ஆதரவாய் பயன்படுத்தித் தமிழரை இழிவுப்படுத்தி கூலிவாங்கி பிழைக்கும் மாபெரும் தமிழ்த்*

*துரோகியே ஆவான். முழுப்பொய்யன். முழுப்பித்தலாட்டக்காரன். தன்னைப் பார்ப்பானாகவே கருதிக்கொண்டு பார்ப்பான் கூட சொல்லப்பயப்படும் கருத்துக்களை எல்லாம் கூறி தமிழர்களை நிரந்தர கீழ்மக்களாக்கிவிட்ட துரோகியாவான். இம்மூவர்களும் ஜாதியையும், ஜாதித் தொழிலையும் ஏற்றுக்கொண்டவர்கள் ஆவார்கள்".*

இதுதான் முக்கியத் தமிழ்ப் புலவர்களைப் பற்றிய பார்வை ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு. தொல்காப்பியரும், கம்பனும் துரோகிகள்! சரியான பட்டம்!

தமிழுக்காக தமிழ் இலக்கியத்தை படைத்த இவர்கள் தமிழ்த் துரோகி என்றால் அதே தமிழைப் பழித்த ஈ.வே. ராமசாமி நாயக்கரும் துரோகிதானே! ஈ.வே. ராமசாமி நாயக்கர் தமிழை எவ்வாறெல்லாம் விமர்சித்தார் தெரியுமா?

தமிழ் காட்டுமிராண்டி மொழி:

"தமிழும் தமிழரும்" என்ற நூலிலே, ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறுகிறார்:-

"தமிழ் மொழியை நான் ஒரு காட்டுமிராண்டி மொழி என்று சுமார் 40 ஆண்டுகளாகக் கூறி வருகிறேன்."

"தமிழ்ப் படித்த, தமிழில் புலவர்களான வித்துவான்கள் பெரிதும் 100 க்கு 99 பேருக்கு ஆங்கில வாசனையே இல்லாது வெறும் தமிழ் வித்வான்களாக... தமிழ்ப் புலவர்களாக வெகுகாலம் இருக்க நேர்ந்துவிட்டதனால் அவர்களுக்கும் பகுத்தறிவுக்கும் வெகுதூரம்

ஏற்பட்டதோடு அவர்கள் உலகம் அறியாத பாமரர்களாகவே இருக்க வேண்டியவர்களாக ஆகிவிட்டார்கள்.”

(அதாவது தமிழ் படித்ததால்தான் பகுத்தறிவு இல்லாமல் போய்விட்டார்களாம். உலகம் அறியாதவர்களாகி விட்டார்களாம். நூலாசிரியர்.)

”தமிழை ஒதுக்கிவிடுவதால் உனக்கு (தமிழருக்கு) நட்டம் என்ன? வேறுமொழியை ஏற்றுக் கொள்வதால் உனக்கு பாதகம் என்ன?”

”புலவர்களுக்கு (தமிழ் படித்துத் தமிழால் பிழைப்பவர்களுக்கு) வயிற்றுப் பிழைப்புக்கு வேறு வழியில்லையே என்கிற காரணம் ஒன்றே ஒன்று அல்லாமல் தமிழர்கள் நல்வாழ்விற்கு தமிழ் எதற்கு ஆக வேண்டியிருக்கிறது?”

”யாருக்குப் பிறந்தாலும் மானம் தேவை. அது உன்னிடம் இருக்கிறதா, என்னிடம் இருக்கிறதா என்பதுதான் இப்பொழுது சிந்திக்க வேண்டிய தேவை. அதையும்விடத் தமிழ்மொழியிலும், தமிழ் சமுதாயத்திலும் இருக்கிறதா, இருப்பதற்குத் தமிழ் உதவியதா என்பதுதான் முக்கியமான, முதலாவதான கேள்வி?”

”இந்தியை நாட்டுமொழியாகவும், அரசியல் மொழியாகவும் பார்ப்பனரும், பார்ப்பன ஆதிக்க ஆட்சியும் முயற்சிக்கின்ற சந்தர்ப்பங்களில் அதன் எதிர்ப்புக்கு பயன்படுத்திக்கொள்ள தமிழுக்கு சிறிது இடம் கொடுத்து வந்தேன்.”

(தமிழ்ப்பற்றால் இந்தியை எதிர்க்கவில்லை என்று ஈ.வே. ராமசாமி நாயக்கரே சாட்சியம் கொடுத்துள்ளார் – நூலாசிரியர்.)

"தமிழ் காட்டுமிராண்டிக் காலத்துமொழி"

(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் II-ம் தொகுதி)

"தமிழ் ஒரு நியூசென்சு, தமிழ்ப் புலவர்கள் (யாவரும்) குமுக எதிரிகள்"

(நூல்: தந்தை பெரியார், கவிஞர் கருணானந்தம்)

"தாய்ப் பாலை (தமிழை) எதற்காகப் படிக்க வேண்டும்? படித்த பிறகு அது எதற்குப் பயன்படுகிறது?"

"இன்றைய முற்போக்குக்கு முதல் எதிரி தாய்ப் பால் குடித்த மக்கள்தானே."

(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் II-ம் தொகுதி)

இதுதான் தமிழைப் பற்றிய ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய கணிப்பு. இன்று தமிழுக்காக போராடுகின்ற தமிழறிஞர்கள் முதலில் எதிர்க்க வேண்டியவர் ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

(இதிலே இன்னொரு விஷயம் தமிழை பழித்தவனை தாய் தடுத்தாலும் விடேன் என்று சொன்ன பாரதிதாசன் தமிழைப் பழித்த ஈ.வே. ராமசாமி நாயக்கரின் சீடராகவே இருந்தது, பாரதிதாசனின் தமிழ்ப் பற்றுமேல் சிறிது ஐயம் கொள்ளவைக்கிறது.)

தமிழைப் பற்றி இவ்வளவு தரக்குறைவுடன் கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஆங்கில மொழியைப் பற்றி பெருமையாக கூறிய கருத்துக்களைப் பற்றி பார்ப்போம்.

*(சில குறிப்புகள்:*

*01. ஈ. வே. ராமசாமி நாயக்கர் கன்னடர்...*

*பெரியார் ஈ.வே.ரா நாட்டாலும் பழக்க வழக்கங்களாலும் தமிழராயினும், மொழியால் கன்னடர்தான். ஆம் அவரது வீட்டு மொழி கன்னடம். தாம் கன்னடர் என்பதை அவரே தமது பேச்சிலும், எழுத்திலும் பன்முறை மிகவும் பெருமிதத்தோடு சொல்லிக்கொண்டார்.*

*டாக்டர் ம.பொ. சிவஞானம்*

*நூல்: தமிழகத்தில் பிறமொழியினர்*

*02. கம்பன் தமிழர் நாகரிகத்தின் விரோதியா?*

*சிலர் இலக்கிய ஆராய்ச்சி முறைக்கு மாறாகக் குறுக்கு வழியிலே புகுந்து கம்பனைப் பற்றி ஏதேதோ எழுதுகின்றனர். பேசுகின்றனர். அரசியல் கொள்கை, இன வெறுப்பு, பண்பாட்டு வெறுப்பு இவைகளை அடிப்படையாக வைத்துக் கொண்டு கம்பன் மீது காய்ந்து விழுகின்றனர்.*

*'கம்பன் தமிழர் நாகரிகத்தின் விரோதி: தமிழ் நாட்டின் வளர்ச்சிக்கு எதிரி. தமிழ் மொழியின் முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டை. நாட்டுப்பற்றில்லாதவன். மொழிப்பற்றில்லாதவன். கலாசாரப்*

*பற்றில்லாதவன் என்றெல்லாம் ஒரு சிலர் ஓங்கிப் பேசுகின்றனர். இது உண்மைக்கு மாறான பேச்சென்பதே கம்பனை நடுநிலையிலிருந்து கற்றவர்களின் கருத்து.*

*தமிழறிஞர் சாமி. சிதம்பரனார்*

*நூல்: கம்பன் கண்ட தமிழகம்.*

*03. கம்பன் காவியத்தைக் கொளுத்தலாமா?*

*கம்பன் மீது இன்று சிலர் காய்ந்து விழுகின்றனர். தமிழின் சிறப்பைத் தரணியிலே விளக்கி நிற்கும் இக்காவியத்தை கொளுத்த வேண்டும் என்றுகூடச் சிலர் கூறுகின்றனர். கம்பன் காவியத்தைக் கையினால் தொடக்கூடாது என்றும் பேசுகின்றனர்.*

*சிறந்த காவியங்கள்— உயர்ந்த இலக்கியங்கள்— எந்தக் காலத்திலும் மக்கள் உள்ளத்திலிருந்து ஓடிப் போய்விடமாட்டா. அவைகளை அழிக்க முயன்றவர்கள் யாராயினும் வெற்றி காணமாட்டார்கள். இந்த உண்மையை நாம் தமிழ் இலக்கிய வரலாற்றிலே காணலாம்.*

*தமிழறிஞர் சாமி. சிதம்பரனார்*

*நூல்: கம்பன் கண்ட தமிழகம்.)*

## ***பெரியாரின் மறுபக்கம் – பாகம் 2 (ஆங்கில மோகம்)***

*" ஆங்கிலம் தமிழன் இடத்தில் இருக்கத் தகுந்த மொழியாகும்."*

*"தமிழ்மொழிக்கு ஆங்கில எழுத்துக்களை எடுத்துக்கொண்டு காட்டுமிராண்டி கால (தமிழ்) எழுத்துக்களை தள்ளிவிடு என்றேன்."*

*"தமிழிலிருக்கும் பெருமை என்ன? நான் சொல்லும் ஆங்கிலத்தில் இருக்கும் சிறுமை என்ன?"*

*நூல்:- தமிழும் தமிழரும்*

*இப்போதும் நான் இந்தியை எதிர்க்கத்தான் செய்கிறேன். ஆனால் நீங்கள் சொல்வது போல் தமிழ் கெட்டுவிடுமே என்று அல்ல. இனிமேல் கெடத் தமிழில் என்ன மிச்சம் இருக்கிறது? ஆனால் நமக்கு ஆங்கில அறிவு தேவை என்பதால், இந்தியை எதிர்க்கிறேன். இந்தி எதிர்ப்பு மொழிச்சிக்கல் அல்ல. அரசியல் சிக்கல்தான்.*

*(விடுதலை 03.03.1965)*

(முதலில் பார்ப்பனருக்காக இந்தியை எதிர்த்தேன் என்றார். பின்பு ஆங்கில அறிவு தேவையென்பதால் இந்தியை எதிர்க்கிறேன் என்கிறார். எவ்வளவு முரண்பாடான பேச்சு என்பதைப் பாருங்கள்! இதுதான் ஈ. வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடு மிக்க, நாணயமான பேச்சு.)

*"இந்தியாவுக்கு ஒரு பொது மொழி வேண்டுமானாலும் அல்லது வணிகத்திற்கு ஒரு பொதுமொழி வேண்டுமானாலும், ஆங்கில மொழியைத் தேர்ந்தெடுத்து அதை எல்லா மக்களிடையிலும் பரப்ப முயற்சிக்க வேண்டுமேயன்றி வேறு மொழியைப் பற்றி எண்ணுவது முட்டாள்தனமே, சூழ்ச்சியேதான் ஆகும்.*

*(குடியரசு 20.01.1920)*

*"காலையில் நான் இம்மாநாட்டுத் தலைவரை ஆதரித்துப் பேசுகையில், தமிழைவிட ஆங்கிலத்தைக் கட்டாய பாடமாக்கினால், அதற்கு வாக்களிப்பேன் என்று கூறினேன்."*

*(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் III-ம் தொகுதி)*

*"இன்றைய நாளில் கூட மேற்கண்ட தமிழ்த்தாயின் பாலை நேரே அருந்தி வளர்ந்த பிள்ளைகள் ஆங்கிலப் புட்டிப்பாலை அருந்தி இருப்பார் களேயானால், இந்த அன்பர்கள் உட்பட எவ்வளவோ ஆற்றலும் திறமையும் உடையவர்களாகி இவர்கள் வாழ்க்கை நிலையை வேறாக, அதாவது அவர்கள் நல்ல பயன் அடைபவர்களாக ஆகியிருப்பார்கள் என்பதோடு மற்றவர்களுக்கும் பயன்படும்படியான நல்ல உயரமுள்ள உழைப்பாளராகி இருப்பார்கள் என்று உறுதியோடு கூறுவேன்."*

*"இன்றைக்கும் எந்தத் துறையிலானாலும் நமக்குத் திறமை ஏற்பட வேண்டுமானால், அதற்காக நம் மக்களை மேல் நாடுகளுக்கு அனுப்பி (ஆங்கில) புட்டிப்பாலில்தான் எண்ணங்கள், செயல்முறைகள், பண்டங்களின் பெயர்கள், பாகங்களின் பெயர்கள், நடைமுறையின் பெயர்கள், அடிப்படைக் கருத்துக்கள் முதலியவற்றை அறிந்து வரும்படி செய்யத்தான் நம்மால் முடிகிறதே தவிர, நமது தாய்ப்பால் (தமிழ்) இவற்றில் எதற்காகவாவது பயன்படுகிறதா?"*

*(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் II-ம் தொகுதி)*

*"ஆங்கிலமே தமிழனின் பேச்சு மொழியாக ஆகும்படியான காலம் ஏற்பட்டால் நான் மிகமிக மகிழ்ச்சியும் நிறைவும் அடைவேன் என்று பேசியிருக்கிறேன்."*

*"உங்கள் வீட்டில் மனைவியிடமும் குழந்தைகளுடனும் மட்டுமின்றி வேலைக்காரிகளுடனும் ஆங்கிலத்திலேயே பேசுங்கள், பேசப் பழகுங்கள், பேச முயலுங்கள்) தமிழ்ப் பைத்தியத்தை விட்டொழியுங்கள்.*

*(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் II-ம் தொகுதி)*

தமிழ் மொழி மீது வெறுப்பும், ஆங்கில மொழி மீது பற்றும் கொண்ட 'ஈ. வே. ராமசாமி நாயக்கர்தான் தமிழுக்காக

அரும்பாடுபட்டவர் என்று சொல்கின்றனர். ஆங்கில மோகம் கொண்ட ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான் தொல்காப்பியரையும், கம்பனையும் தமிழ் துரோகிகள் என்று சொல்கின்றனர். இதைச் சொல்ல ஈ. வே. ராமசாமி நாயக்கருக்கு என்ன யோக்கியதை இருக்கிறது? என்பது தான் உண்மையானத் தமிழர்களின் கேள்வி.

அது மட்டுமல்ல, ஆங்கிலம் படித்தால் ஆற்றலும் திறமையும் உடையவர்களாகிவிடுவார்கள் என்று சொல்லுகின்றாரே ஈ. வே. ராமசாமி நாயக்கர்-

-அப்படியானால் ஆங்கிலேயர்கள் எல்லோரும் ஆற்றலும் திறமையும் உடையவர்களா? ஆங்கிலேயே நாட்டிலேதான் பிச்சைக்காரர்கள் அதிகமாக இருக்கிறார்கள். அப்படியானால் ஆங்கிலம் தெரிந்த பிச்சைக்காரர்களுக்கும் ஆற்றலும் திறமையும் இருந்திருக்குமே, எதற்காக ஆற்றலும் திறமையும் வைத்துக்கொண்டு பிச்சையெடுக்கிறார்கள்? ஆக ஆங்கிலம் படிப்பதால் மட்டும் ஒருவர் ஆற்றலும் திறமையும் உடையவர்களாகி விடமுடியாது.

அதுமட்டுமல்ல, எல்லோரிடமும் ஆங்கிலமே பேசுங்கள் என்று சொன்ன ஈ.வே. ராமசாமி நாயக்கர், தன் மனைவியுடனும், வேலைக்காரர்களுடனும் ஆங்கிலத்திலேயே பேசினாரா? இல்லையே! சாக்ரடீஸ் முதலானவர்களோடு ஈ.வே. ராமசாமி நாயக்கரை ஒப்பிடுகிறார்களே- அப்படியானால் ஆங்கிலப்

புட்டிப்பாலை உண்டுதான் ஈ. வே. ராமசாமி நாயக்கர் பகுத்தறிவாளரானாரா? ஆங்கிலம் படித்ததனால் ஈ. வே. ராமசாமி நாயக்கருக்கு ஆற்றலும் திறமையும் வந்ததா? பதிலைப் பகுத்தறிவுவாதிகள்தான் சொல்ல வேண்டும்!

## பெரியாரின் மறுபக்கம் – பாகம் 3 (திருக்குறளைப் பற்றிய முரண்பாடு)

திருவள்ளுவர் திருக்குறளில் ஆரியக்கருத்துக்கு ஆதரவு கொடுக்கும் அளவில் எழுதியிருக்கிறார். பகுத்தறிவை பற்றிக் கவலைப்படாமல் எழுதியிருக்கிறார். தனது மத உணர்ச்சியோடு எழுதியிருக்கிறார்'' என்று விமர்சனம் செய்த அதே ஈ.வே. ராமசாமி நாயக்கர், இதற்கு முரண்பட்ட வகையிலும் பேசியிருக்கிறார். முரண்பட்ட வகையில் பேசுவது ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு நிகர் ஈ.வே. ராமசாமி நாயக்கரேதான். அப்படி என்ன முரண்பாடு ஏற்படும் வகையில் பேசினார் தெரியுமா? இதோ!

14.03.1948, மூன்றாவது திருவள்ளுவர் மாநாட்டில் ஈ. வே. ராமசாமி நாயக்கர் ‘‘(திருக்குறளில்) எத்தகைய பகுத்தறிவுக்கு புறம்பான ஆபாசக் கருத்துக்களுக்கும் அதில் இடமில்லை'' என்றும்

‘‘திருக்குறள் ஆரிய தர்மத்தை – மனு தர்மத்தை அடியோடு கண்டிப்பதற்காகவே ஏற்பட்ட நூல் என்பதை நீங்கள் உணர வேண்டும்'' என்றும் கூறுகிறார்.

23, 24-10-1948 அன்று ஈ. வே. ராமசாமி நாயக்கர்,

‘‘குறள் ஹிந்து மதக் கண்டன புத்தகம் என்பதையும், அது சர்வ மதத்திலுள்ள சத்துக்களை எல்லாம் சேர்த்து எழுதப்பட்டுள்ள மனித தர்ம நூல் என்பதையும் எல்லோரும் உணர வேண்டும்’’ என்றும் கூறுகிறார்.

முதலில், திருக்குறள் ஆரியக் கருத்துக்கு ஆதரவு கொடுக்கும் நூல் என்று கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் அதற்கு முரணாக திருக்குறளில் ஆரிய தர்மத்தை கண்டிப்பதற்காக ஏற்பட்ட நூல் என்று பல்டி அடித்தார்.

இரண்டாவது, திருக்குறள் பகுத்தறிவைப் பற்றி கவலைப்படாமல் எழுதப்பட்டது என்று கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் அதற்கு முரணாக திருக்குறளில் பகுத்தறிவுக்கு புறம்பான கருத்துக்களுக்கு அதில் இடமில்லை என்று கூறி பல்டி அடித்தார்.

மூன்றாவது, தனது மத உணர்ச்சியோடு எழுதினார் என்று கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் அதற்கு முரணாக குறள் இந்து மதக் கண்டன நூல் என்று கூறி பல்டி அடித்தார்.

20.01.1929 குடியரசு இதழில் ஈ. வே. ராமசாமி நாயக்கர், ‘‘அவரது குறளில் இந்திரன், பிரம்மா, விஷ்ணு முதலிய தெய்வங்களையும், மறுபிறப்பு, சுவர்க்கம், நரகம், மேலோகம், பிதுர், தேவர்கள் முதலிய ஆரிய மத சம்பிரதாயங்களையும், மூட நம்பிக்கைகளையும் கொண்ட விஷயங்களைப் பரக்கக் காணலாம்’’ என்று கூறுகிறார்.

இவ்வாறு கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் தான் திருக்குறள் ஹிந்து மதக் கண்டன நூல் என்று முரண்படக் கூறுகிறார்.

முரண்பாட்டின் மொத்த உருவம் ஈ.வே. ராமசாமி நாயக்கர் தான் என்று சொன்னால் அது மிகையாகாது.

மேலும் ஈ. வே. ராமசாமி நாயக்கர்,

''நாம் பின்பற்றத் தகுந்த முறையில், நமக்கு பயன்படுகிற முறையில் எந்த இலக்கியம் இருக்கிறது? தொல்காப்பியம் என்று சொல்லுவார்கள். மொழிப்பற்று காரணமாக சொல்வார்கள். ஆரியத்திலிருந்து விலகி, ஆரியக்கருத்துக்களை எதிர்த்து சொன்னார் என்ற முறையில் அதில் ஒன்றுமே இல்லை'' என்று 1958 டிசம்பர் மாதம் வள்ளுவர் மன்றத்திலே கூறுகிறார். இதுதான் இவருடைய இலக்கிய ஆராய்ச்சி!

ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய இலக்கிய ஆராய்ச்சியின் முடிவு என்ன தெரியுமா?

''உண்மையாகப் பார்ப்போமானால் நமக்கு இலக்கியமே இல்லை. இலக்கியங்கள் என்று பாராட்டத் தகுந்த இலக்கியங்கள் இருக்கின்றன. நாம் பின்பற்றத் தகுந்த முறையில் நமக்குப் பயன்படுகிற முறையில் எந்த இலக்கியம் இருக்கிறது?'' என்று கேட்கிறார்.

இதுதான் இவருடைய இலக்கிய ஆராய்ச்சியின் முடிவு.

சங்க இலக்கியங்கள் இருக்கின்றனவே! அந்த இலக்கியங்களில் புறநானூறு இருக்கின்றனவே! அதில் ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற கணியன் பூங்குன்றனாரின் பாடல் பின்பற்றத் தகுந்தவையாக இருக்கின்றதே. இனியவை நாற்பது, இன்னா நாற்பது, நாலடியார் இருக்கின்றதே! இதையெல்லாம் ஈ.வே.

ராமசாமி நாயக்கர் படித்திருக்க மாட்டாரா? நிச்சயம் படித்திருப்பார். ஆனால் அவருடைய நோக்கமே தமிழரை, தமிழைக் கேவலப்படுத்துவதுதானே! சரி நமக்கு இலக்கியங்களே இல்லை என்று வைத்துக்கொள்வோம். ஈ.வே. ராமசாமி நாயக்கராவது ஒரு இலக்கியத்தைக் கொடுத்திருக்கலாமே! அல்லது அவரது கழகத் தோழர்களாவது ஒரு இலக்கியத்தைக் கொடுத்திருக்கலாமே. அப்படி ஒரு இலக்கியம் இருந்தால் காட்டுங்கள் பார்க்கலாம். ஏன் அவ்வாறு செய்யவில்லை? நாம் பின்பற்றும் முறையில், நமக்குப் பயன்படுகிற முறையில் ஒரு இலக்கியத்தை ஈ.வே. ராமசாமி நாயக்கர் கொடுத்திருக்கலாமே! இதிலிருந்தே தமிழ் மொழி பழிப்புதான் ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய நோக்கம் என்று நாம் தெரிந்துகொள்ள வேண்டும். தமிழ் வளர பகுத்தறிவுவாதிகளின் பங்கு என்ன? தமிழை வளர்ப்பதற்கு பதில் ஆங்கிலம் வளர்வதற்கு மாநாடு நடத்தியவர்கள்தானே இந்த பகுத்தறிவுவாதிகள்!

திருக்குறளை முஸ்லீம்கள் ஏற்றுக் கொள்கிறார்களா?

திருக்குறள் ஹிந்து மதக் கண்டன நூல் என்று கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர் 23,24.10.1948 திராவிடர் கழக 19-வது மாநாட்டில்,

''முகம்மது நபியவர்களால் கூறப்பட்டுள்ள பல கருத்துக்களை குறளில் அப்படியே காணலாம். முஸ்லிம்களுக்கு எதிராக அதில் ஒன்றுமே காணமுடியாது'' என்றும் ''குறளை முஸ்லிம்கள், கிறிஸ்தவர்கள் உள்பட யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள்.

நீங்களும் (கிறிஸ்தவர்கள்) குறள் மதக்காரர்கள். பைபிளுக்கு விரோதமாகக் குறளில் ஒன்றும் கிடையாது'' என்றும் கூறுகிறார்.

முஸ்லிம்களை குறள் மதத்துக்காரர் என்று சொன்னாரே ஈ.வே. ராமசாமி நாயக்கர் – அதை முஸ்லிம்கள் ஏற்றுக்கொண்டார்களா? அல்லது திருக்குறளைத்தான் முஸ்லிம்கள் மதித்தார்களா? இல்லவே இல்லை என்பதுதான் வரலாறு காட்டும் உண்மை!

1968-டிசம்பர் மாதம், மதனீ என்பவர், திருச்சியிலே ஒரு புத்தகத்தை எழுதி வெளியிட்டு இருக்கிறார். அந்த புத்தகத்தினுடைய தலைப்பு ''முஸ்லீம்களுக்குப் பொதுமறை எது? குறளா? குர் ஆனா?'' என்பதுதான். இந்தப் புத்தகத்திலே அவர் திருக்குறளையும், குரானையும் ஒப்பிட்டு ஆராய்ந்து கூறியுள்ளார். அவர் என்ன கூறியுள்ளார் என்பதைப் பார்ப்போம்.

''...அத்தகைய தகுதி திருக்குர்ஆனுக்கே உண்டு. குறளுக்கில்லை. திருக்குரான் இறைவன் அமைப்பு. குறள் மனித அமைப்பு. ஒப்பிட்டு பேசுவதோ, போட்டி மனப்பான்மையில் வாதிடுவதோ பெருந்தவறு, கூடாத வினையாகும். ஐந்து வயதுச் சிறுவன், போலு பயில்வானிடம் மல்லுக்கு நிற்பது போலாகும்.'' (பக்.2)

''இஸ்லாமியனுக்கு இது ஏற்புடையத்தன்று'' (பக்.3)

''குறள் ஒன்றே பொதுமறை என்று எவர் கூறியிருந்தாலும் சரி; கூறிக்கொண்டிருந்தாலும் சரி, அனைவரெல்லாம் திருகுரானை கற்றுணராதவர்கள் என்றே துணிவுபடக் கூறலாம்.'' (பக்.5)

''உருப்படியான ஒழுக்க நூல் திருகுரானைத் தவிர உலகில் வேறு எந்த நூலும் இல்லை. இருக்க முடியாது என்ற அசைக்க முடியாத

நம்பிக்கையில் இருந்து வருபவர்கள் இஸ்லாமியர்கள். இறுதி மூச்சுப் பிரியும் வரை இதே நம்பிக்கையில் தான் இருப்பார்கள், இறப்பார்கள்.'' (பக்.6)

''களங்கமுள்ள ஓர் ஏடு எப்படிப்புனித இலக்கியமாகும்? வாழ்க்கை நூலாகும்? பொது மறையாகும்? எல்லார்க்கும், எல்லாக் காலத்திற்கும் ஏற்புடையதாகும்? திருக்குரானைத் தேன் நிலாவாகக் கருதிடும் சீலர்கள் சிறிதேனும் சிந்தித்தால் நல்ல தெளிவேற்படும்-உண்மை பல பளிச்சிடும்.'' (பக்.8)

''குறள்நெறி, குரானின் நெறி கொண்டதல்ல. இரண்டின் வழியும் விழியும் வேறு. குரலும் கோட்பாடும் வேறு. (பக்.23)

''வள்ளுவர்க்கு ஒரு கொள்கை இல்லை. ஒரு குறிக்கோள் இல்லை. அதனால் மக்களைத் தன் கொடியின் கீழ் கொண்டு வரமுடியவில்லை'' (பக்.30)

''திருக்குறளை பாலுக்கு ஒப்பிட்டால், திருக்குரானை தண்ணீருக்கு ஒப்பிடலாம். பால் எல்லோருக்கும், எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பயன்படக்கூடியதல்ல. பொது உணவுப் பொருளாகவும் அது இருந்திட முடியாது. விரும்பக் கூடியதும் அல்ல. தண்ணீரோ அப்படியல்ல. எல்லோருக்கும் எல்லாக் காலத்துக்கம் எல்லாச் சந்தர்ப்பத்திலும் பயன்படக் கூடியதாகும்.'' (பக்.139)

இவ்வாறு 144 பக்கம் கொண்ட இந்த புத்தகத்தில் ஒவ்வொரு பக்கத்திலும் திருக்குறளைத் தாழ்த்தி திருக்குரானை உயர்த்தி சொல்லப்பட்டிருக்கிறது. திருக்குறளை முஸ்லிம்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்று ஈ. வே. ராமசாமி நாயக்கர்

உயிரோடு இருக்கும் போதே – அதுவும் திராவிடர் கழகம் நிலை கொண்ட திருச்சியிலேயே ஆணி அடித்தாற் போல் சொல்லப்பட்டு இருக்கிறது.

குறளை முஸ்லிம்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்று திருச்சியிலே, முஸ்லிமின் குரல் ஒலித்ததே – அப்படியானால் முஸ்லிம்கள் குறள் மதக்காரர்கள் என்று ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்னாரே – அது ஏன்? அப்படிச் சொன்ன மதனீக்காவது கண்டனம் தெரிவித்தாரா? அந்த புத்தகத்துக்கு எதிராக விடுதலையில் ஒரு வரியாவது கண்டித்து எழுதினாரா? இல்லையே ஏன்?

ஒருவேளை முஸ்லிம்களின் இந்த கருத்தை ஏற்றுக்கொண்டாரோ என்னவோ! முஸ்லிம்கள் திருக்குறளை ஏற்றுக்கொண்டார்களா, இல்லையா என்பது கூட விமர்சனம்தான். ஆனால் அந்த புத்தகத்திலே திருக்குறளை கண்டபடி திட்டியிருக்கிறார்களே அதைப் பற்றி ஈ.வே. ராமசாமி நாயக்கரோ அல்லது அவரது அடியார் வீரமணியோ கண்டித்தார்களா? களங்கமுள்ள ஏடு என்றெல்லாம் திருக்குறளை முஸ்லிம்கள் சொன்ன போது – திருக்குறள் வழியில் நடக்கும் கழகம் திராவிடர் கழகம் என்று சொன்ன ஈ.வே. ராமசாமி நாயக்கரோ அல்லது வீரமணியோ எங்கு போனார்கள்? திருக்குறள் திராவிடர்களின் வா|க்கை நூல் என்று சொன்ன ஈ. வே. ராமசாமி நாயக்கர் – அதை கேவலப்படுத்திய முஸ்லிமையோ அந்த புத்தகத்துக்கோ கண்டனம் தெரிவிக்காதது ஏன்? – இதுதான் திருக்குறளுக்கு திராவிடர் கழகம் செய்த தொண்டா?

ஒருவேளை இந்த புத்தகம் வந்ததே தெரியாது என்று சொல்லி விடுவார்கள். ஆனால் இந்து முன்னணி இந்த புத்தகங்களை வாங்கி பதிவுத் தபாலில் திராவிடர் கழகம் முதல் பகுத்தறிவுவாதிகள் அனைவருக்கும் அனுப்பியதே – அப்போது கூட வீரமணியோ அல்லது பகுத்தறிவுவாதிகளோ அல்லது தமிழறிஞர்களோ கூட கண்டிக்க வில்லையே ஏன்? இதுதான் தமிழ்ப் பற்றா? இவர்கள்தான் தமிழைக் காக்க புறப்பட்ட வீரர்களா? சரி அப்போதுதான் கண்டிக்கவில்லை. இப்பொழுதாவது கண்டிக்கத் துணிவு உண்டா? ‘தடை செய் இராமாயணத்தை’ என்று சொன்னார்களே? – அதே போல ‘தடை செய் மதனீயின் புத்தகத்தை’ என்று சொல்லத் தயாரா? பதில் சொல்வார்களா பகுத்தறிவுவாதிகள்!

ஈ.வே. ராமசாமி நாயக்கரின் காலத்திலிருந்தே தமிழில் வழிபாடு நடத்தப்பட வேண்டும் என்ற குரல்கள் ஒலித்துக்கொண்டு வருகின்றன. தமிழில் வழிபாடு நடத்தப்பட வேண்டும் என்று நாங்கள் தான் போராடுகிறோம் என்று தி.க.வினர் சொல்கின்றனர், ஆனால்முதன் முதலில் தமிழில் வழிபாடு நடத்தப்பட வேண்டும் என்று கூறியவர்கள் ஈ.வே. ராமசாமி நாயக்கரோ அல்லது நாத்திகர்களோ அல்ல. ஆத்திகர்கள்தான்.

மறைமலை அடிகள் முதல் தனித் தமிழ் இயக்க ஆத்திகர்கள் அதற்காக போராடினார்கள். இதில் தி.க.வினர் சொந்தம் கொண்டாட உரிமையில்லை. ஏனென்றால் கடவுளும் வேண்டாம், கோயிலும் வேண்டாம் என்று சொல்லுகின்ற தி.க.வினர் கோயிலில் எந்த மொழியில் வழிபாடு நடத்த வேண்டும் என்று சொல்ல உரிமையில்லைதானே!

## பெரியாரின் மறுபக்கம் – பாகம் 4 (திருக்குறளைப் பற்றிய முரண்பாடு – தொடர்ச்சி)

## மசூதியில் தமிழ்: ஈ.வே. ரா போராடததது ஏன்?

*சரி, வழிபாடு எந்த மொழியில் நடத்தப்பட வேண்டும் என்று ஹிந்துக் கோயிலுக்கு மட்டும்தானா? மற்ற மதக்காரர்களுக்கு இந்த அறிவுரை இல்லையா? முஸ்லிம்களும், கிறிஸ்தவர்களும் தமிழர்கள்தான் என்று ஈ.வே. ராமசாமி நாயக்கரே சொல்லியிருக்கிறார். அப்படியிருக்கும்போது அந்தத் தமிழர்களுக்கு தி.கவினர் போராட முன்வர வேண்டும் அல்லவா! எப்பொழுதுதாவது மசூதியில் தமிழில் குரான் ஓதப்பட வேண்டும் என்று ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்னதுண்டா? அல்லது வீரமணிதான் சொன்னதுண்டா? இல்லையே ஏன்?*

*இதோ, நெல்லை மேலப்பாளையம் ரகுமானியாபுரம் வடக்குத் தெருவில் வசிக்கும் முஸ்லிம் மக்களில்* 11 *குடும்பங்களை சேர்ந்த சுமார்* 75 *பேர், பள்ளிவாசலில் தமிழில் குரான் வாசித்ததற்காகவும், மார்க்க விளக்கக்கூட்டம் போட்டதற்காகவும் ஜமாத்திலிருந்து விலக்கி வைக்கப்பட்டுள்ளனர். (குமுதம் ரிப்போர்ட்டர்* 18.05.2003) *தமிழுக்காக ஏங்கும் அந்த முஸ்லிம்களின் அழுகுரல் கேட்கிறதே! அந்த அழுகுரல் தமிழர் தலைவரான உங்கள்*

காதுகளில் விழவில்லையா? அல்லது விழுந்தும் பயத்தில் வேர்த்து இருக்கிறீர்களா?

கோயிலில் தமிழ் அர்ச்சனை வேண்டுமா, வேண்டாமா என்று பட்டிமன்றம் முதல் மாநாடு வரை கூடி விவாதிக்கும் தமிழ் அறிஞர்கள் மற்றும் தி.க. வினர் இந்த சமயத்தில் மட்டும் எங்கு தொலைந்து போனார்களோ தெரியவில்லை!

தமிழில் மசூதியில் வழிபாடு நடத்தக்கூடாது என்று சொன்ன முஸ்லிம்களை இதுவரை வீரமணி கண்டிக்காதது ஏன்? இதுவரை அதைக் கண்டித்துப் போராட்டம் நடத்தாதது ஏன்? தமிழில் வழிபாடு நடத்தியதால் ஜமாத்திலிருந்தே விலக்கி வைக்கப்பட்டுள்ளனர் என்றால் விலக்கியவர்கள் தமிழ்மேல் எவ்வளவு வெறுப்பு கொண்ட முஸ்லிம்களாக இருக்கவேண்டும்? அவ்வளவு வெறுப்புக் கொண்ட முஸ்லிம்களை இதுநாள்வரை வீரமணியோ, மற்ற தமிழறிஞர்களோ கண்டிக்க முன்வரவில்லையே! இதுதான் தமிழ்பற்றா? இதுதான் தி.க.வினர் தமிழுக்கு ஆற்றும் தொண்டா?

ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கருத்துகளைத் தாங்கிவரும் இதழ் ‘நந்தன் இதழ்.’ ஈ.வே. ராமசாமி நாயக்கரை யாராவது விமர்சித்ததால் உடனே ‘நந்தன்’ இதழில் மறுப்புரை வரும். தலையங்கத்திலேயே ஈ.வே. ராமசாமி நாயக்கரின் படம்

போட்டுதான் வரும். அந்த அளவுக்கு ஈ.வே. ராமசாமி நாயக்கரை துணைகொண்டு வரும் ‘நந்தன்’ (99 நவம்பர் 1-15) இதழ், ‘குழப்பவாதிகள்’ என்னும் தலையங்கத்தை எழுதியிருக்கிறது.

இதோ அந்தத் தலையங்கம்:-

“முதல் மாதம் என்பதற்காகச் சித்திரையில் விதைப்பதில்லை. மூத்தவர்கள் சொல்வதெல்லாம் தத்துவங்கள் ஆவதில்லை.

அண்மையில் ஆந்திர மாநிலம் குப்பத்தில் உள்ள திராவிடப் பல்கலைக்கழகக் கருத்தரங்கம் ஒன்றில் உரையாற்றிய முன்னாள் ஆளுநர் சி. சுப்ரமணியம் அவர்கள் இந்தியாவின் இரண்டாவது ஆட்சிமொழியாக ஆங்கிலம் நிரந்தரமாக ஆக்கப்படவேண்டும் என்ற கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

இந்தியாவில் உள்ள அனைத்து மொழிகளும் ஆட்சி மொழிகளாக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்றுவரும் இந்நேரத்தில், இத்தகைய குழப்பமான, பிற்போக்கான கருத்துக்களை சி. சுப்ரமணியம் போன்றவர்கள் வெளியிடுவது அவர்களை மூத்த அறிஞர்களாகக் காட்டவில்லை. முதிர்ந்த குழப்பவாதிகளாகத்தான் காட்டுகிறது. தினமணி போன்ற ஏடுகள் இக்கருத்தை ஆதரிப்பது ஆழ்ந்த வருத்தத்தை அளிக்கின்றது.

கால் நூற்றாண்டுக்கு முன்னால் நடந்த மொழிப்போராட்டத்தின்போது ஒரு வரலாற்றுப் பிழை நேர்ந்தது. இந்தி மொழியை எதிர்த்த அதே நேரத்தில் ஆங்கிலத்தையும் ஒரு சேர எதிர்க்கத் தவறியதால் நேர்ந்த பிழை அது! இந்தி எப்படி நமக்கு அந்நிய மொழியோ ஆங்கிலமும் அப்படித்தான். இதனை நாம் கணிக்கத் தவறிய காரணமத்தினால்தான் ‘பேச்சுத் தமிழ்’ ஆங்கிலத்தின் ஆக்கிரமிரப்பால் சீரழிந்து போய்விட்டது. ‘மணிப்பிரவாள’ நடையில் இருந்து தமிழை மீட்டு தமிங்கில நடைக்குத் தாரை வார்த்துவிட்டோம். இந்த வரலாற்றுப் பிழையை நேர் செய்தாக வேண்டும். ‘தொடர்பு மொழியாக’ ஆங்கிலம் வேண்டும் என்பதெல்லாம் இந்த விஞ்ஞான யுகத்தில் அறியாமையின் விளைவால் எழும் வீண்வாதங்கள். ஒலியின் வேகத்தையும் விஞ்சுகிறது கணினிகளின் மொழிமாற்றும் திறன்வேகம்!

இந்நிலையில் இந்தி, ஆங்கிலம், இந்த இரண்டு அந்நிய மொழிகளின் ஆதிக்கங்களையும் அகற்றிவிட்டுத் தமிழைத் தமிழ்நாட்டின் ஒரே பயிற்று மொழியாக தமிழ்நாட்டில் ஒரே ஆட்சி மொழியாக, இந்தியாவின் ஆட்சி மொழிகளில் தமிழையும் ஒன்றாக ஆக்குவது ஒன்றே தமிழை வாழ்விக்கும், தமிழரை வாழ்விக்கும் ஒரே வழியாகும்.

இன்று இந்திதான் இந்தியாவின் ஆட்சிமொழியாக இருந்து வருகிறது. இரண்டாவது ஆட்சிமொழியாக ஆங்கிலத்தையும் அரியணையில் ஏற்றிவிட்டால் தமிழ் மூன்றாவது இடத்துக்குத் தள்ளப்பட்டுவிடும்.

தமிழைத் தமிழ்நாட்டின் பயிற்று மொழியாகவும் இந்தியாவின் ஆட்சிமொழிகளில் ஒன்றாகவும் கொண்டுவருவதற்காக, தமிழ் உணர்வாளர்கள் போராடுவது மட்டும் போதாது. ஆங்காங்கே முளைவிடும் இத்தகைய அடிமைச் சிந்தனைகளையும் நாம் மூர்க்கமாக எதிர்த்திட வேண்டும்.

இல்லையென்றால் எதிர்வரும் நூற்றாண்டிலும் தமிழர்கள் இரண்டாந்தரக் குடிமக்களாகக்கூட அல்ல, மூன்றாந்தரக் குடிமக்களாகத்தான் வாழநேரும்.''

இந்தத் தலையங்கத்தில் 'நந்தன்' இதழ், இரண்டு முக்கிய விஷயங்களை தெளிவுபடுத்துகிறது.

1. ஹிந்தியை எதிர்த்த அதே நேரத்தில் ஆங்கிலத்தையும் எதிர்க்க தவறிவிட்டோம்.

2. தமிழ் ஆங்கிலத்தின் ஆக்கிரமிப்பால் சீரழிந்து விட்டது. அதனால் ஆங்கிலம் வேண்டாம்.

இந்த இரண்டு விஷயங்களை ஆராயும் முன் ஒரு முக்கியமான விஷயத்தைப் பார்ப்போம்.

‘தமிழ்நாட்டில் ஹிந்தியைத் திணிக்காதே’ என்ற கோஷம் 1926-ப் பிறகுதான் ஈ.வே. ராமசாமி நாயக்கரால் எழுதப்பட்டது.

ஆனால் தமிழ்நாட்டில் ஹிந்தியை வித்திட்டவர் யார் தெரியுமா? சொன்னால் ஆச்சரியமாக இருக்கும். தமிழ்நாட்டில் இந்தியைத் திணிக்காதே என்று எந்த ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்னாரோ அந்த ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான் தமிழ்நாட்டில் இந்திக்கு வித்திட்டார்.

கவிஞர் கலைக் களஞ்சியம் இதைப்பற்றி ஆராய்ந்து ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார். இதோ அந்தக் கட்டுரை!

‘பெரியார் ஈ.வே. ராமசாமி நாயக்கர் தான் தென்னாட்டில் முதன்முதலில் ஹிந்திக்கு வித்திட்டவர். இவர் 1922-ல் ஈரோட்டில் ஹிந்திப் பள்ளி ஒன்றை ஆரம்பிக்க இலவசமாக இடம் கொடுத்தார்.

‘திரு.வி.க. வின் வாழ்க்கை குறிப்புகள்’ என்ற நூலில் பக்கம் 436-ல் ‘ராமசாமி நாயக்கர் காங்கிரசில் தொண்டாற்றிய காலத்தில் அவர்

முயற்சியால் ஈரோட்டில் ஹிந்தி வகுப்பொன்று நடைபெற்றது. திறப்பு விழாவுக்கு யானுஞ் சென்றிருந்தேன். தென்னாட்டில் ஹிந்திக்கு விதை இட்டவர் நாயக்கரே' என்ற திரு.வி.க. அவர்கள் எழுதியுள்ளார்.

1917-ஆம் ஆண்டிலிருந்து 1925-ஆம் ஆண்டு வரை பார்ப்பனர்களின் தாசனாக விளங்கி வந்த பெரியார் ஈ.வே. ரா. 1925-க்குப் பிறகு அவர் பார்ப்பனர்களின் சிம்ம சொப்பனமாய் விளங்கி அவர்களின் எதிரியானார். அவர் தனது முதல்கட்டமாக அவரால் வித்திடப்பட்ட இந்தி மொழியை எதிர்க்க ஆரம்பித்தார்.

'சித்திர புத்திரன்' என்ற புனைபெயரில் பெரியார் ஈ.வே.ரா. 07-03-1926-ல் தனது குடியரசு இதழில் 'தமிழுக்குத் துரோகமும் இந்தி மொழியின் ரகசியமும்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையை வெளியிட்டார்.

அரசுப் பணியாளர்கள்தான் அரசுக்குப் பயந்து தங்கள் கட்டுரைகளை இதழ்களில் புனைபெயர்களில் வெளியிடுவார்கள். ஆனால் பெரியார் ஈ.வே.ரா. அவர்களோ அரசு பணியாளர் அல்ல. அப்படியிருக்க அவர் சித்திரபுத்திரன் என்ற புனைபெயரில் அக்கட்டுரையை எழுத வேண்டிய அவசியம்தான் என்ன?

பெரியார் ஈ.வே.ரா. இந்தி எதிர்ப்புக் கட்டுரையை தனது பெயரில் வெளியிடாமல் புனைபெயரில் வெளியிட்டமைக்குக் காரணம், பெரியார் ஈ.வே.ராதான் அக்கட்டுரையை எழுதினார் என்ற உண்மையை பார்ப்பனர்கள் அறிவார்களேயானால் அவர்கள் பெரியார் ஈ.வே.ராவைப் பார்த்து 'நீதானே தென்னாட்டில் இந்திக்கு வித்திட்டாய்' என்று பரிகாசம் செய்வார்களே என்பதற்குப் பயந்தே அவர் அவ்வாறு செய்தார்.

1917-ல் ஹிந்தியை காந்தி ஆதரிக்க, அதை நீதிக் கட்சியினர் எதிர்த்த போது நீதிக்கட்சிக்கு ஆதரவாக அந்நாளில் ஹிந்தியை எதிர்க்காத பெரியார் ஈ.வே.ரா. 1926-ல் ஹிந்தியை எதிர்க்க அப்படி என்ன அவசியம் வந்தது?

மூன்றாம் வகுப்புவரை திண்ணைப் பள்ளியில் படித்துவிட்டு இரண்டு ஆண்டுகள் ஆங்கிலம் கற்று 11 வயதில் நான்காவது வகுப்பு தேறியதும் படிப்பை நிறுத்திவிட்டு தனது தந்தையாரின் மண்டியில் வேலை செய்ய ஆரம்பித்த கன்னடத்துக்காரரான பெரியார் ஈ.வே.ராவுக்கு தமிழர்களில் எவருக்குமே இல்லாத அளவிற்கு தமிழர்களின் மீதும், தமிழ்மொழியின் மீதும் திடீரென்று அவரது 47-வயதில் பாசமும், பற்றும், பீறிட்டுவரக் காரணம்தான் என்ன? அவருக்கு ஆகாத பார்ப்பனர்களுக்கு எதிராக தமிழர்கள் கொந்தளித்தெழ வேண்டும் என்பதுதான் அவர் நோக்கம்.

தமிழர்கள் மீதும் தமிழ் மொழி மீதும் பற்றுடையவர் போல நடந்து கொண்டு வந்த பெரியார் ஈ.வே.ரா நாளடைவில் அவரது சுயரூபத்தைக் காட்ட ஆரம்பித்தார்.

1.6.1954-ல் வெளியான 'விடுதலை' இதழில் பெரியார் ஈ.வே.ரா, 'நீ ஒரு கன்னடியன். எப்படித் தமிழனுக்குத் தலைவனாக இருக்கலாம் என்று என்னைக் கூடக்கேட்டார்கள். தமிழன் எவனுக்கும் யோக்கியதை இல்லையப்பா என்றேன். இதற்குக் காரணம் ஒரு தமிழன் இன்னொரு தமிழன் உயர்ந்தவனாக இருப்பதைப் பார்த்துச் சகித்துக்கொண்டிருக்கவே மாட்டான்' என்கிறார்.

''தமிழ் மொழி நம்முடைய தாய்மொழி; அஃது எல்லா வல்லமையும் பொருந்திய மொழி, சமயத்தை வளர்க்கும் மொழி; பழமையின் மொழி; உலகத்திலேயே சிறந்த மொழி என்று சொல்லப்படுகின்ற காரணத்தால் நான் ஹிந்தியை எதிர்த்துப் போராடவில்லை'' என்றும் ''ஹிந்தி எதிர்ப்புத் தமிழுக்காக அல்ல'' என்றும் ''என்னைப் பொருத்தவரையிலும் ஹிந்தியைப் பற்றிக் கவலை இல்லை. தமிழைப் பற்றிய பிடிவாதமும் இல்லை'' என்றும் அவர் பலமேடைகளில் பேசியும், கட்டுரைகளாக பல்வேறு ஏடுகளில் எழுதியும் வந்தார் என்று டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் 'தந்தை பெரியார் சிந்தனைகள்' என்ற தனது நூலில் வெளியிட்டு இருக்கிறார்.

1965-ஆம் ஆண்டில் தமிழ்நாட்டில் மாணவர்களின் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தின்போது பெரியார் ஈ.வே.ரா. அவர்கள் 03.03.1965-ல் ''விடுதலை'' இதழின் தலையங்கத்தில் ''இந்தி விஷயத்தில் நீதானே எதிர்ப்பு உண்டாக்கினாய். இப்போது இந்திக்கு அடிமையாகிவிட்டாயே என்று பலவாறாக எனக்கு வசவுக் கடிதம் (மிரட்டல் கடிதம்) எழுதிவருகிறார்கள். நேரிலும் கேட்டார்கள். எனது நண்பர்கள் பலரும் இதே கருத்துக் கொண்டிருக்கிறார்கள் என்றும், தமிழ் கெட்டு விடுமே என்கின்ற எண்ணத்தில் நான் இந்தியை எதிர்க்கவில்லை. தமிழ் கெடுவதற்கு தமிழில் எதுவும் இல்லை. புலவர்களே தமிழை கெடுத்துவிட்டார்கள்" என்றும், "காமராஜர் ஆட்சி அவசியமா, இந்தி ஒழியவேண்டியது அவசியமா என்று என்னை யாராவது கேட்டால் காமராஜர் ஆட்சிதான் அவசியம் என்று பலமாகச் சொல்வேன்'' என்றும், 08-03-1965-ல் 'விடுதலை' இதழின் தலையங்கத்தில் ''தமிழ் நூல்களே அதிக கேடுபயப்பவை, தமிழில் படிக்கும் கம்பராமாயணத்தால் ஏற்பட்ட, ஏற்படும் முட்டாள்தனமும், கேடும் இந்தி படிக்கும் துளசிதாஸ் ராமாயணத்தாலோ, வங்காள ராமாயணத்தாலோ, வால்மீகி ராமாயணத்தாலோ ஏற்படாது என்பது உறுதி'' என்றும் அவரது கையொப்பமிட்டு வெளியிட்டிருக்கிறார்.

1965-ல் தமிழ்நாட்டில் நடந்தேறிய மாணவர்களது ஹிந்தி எதிர்ப்பு போராட்டத்தின் விளைவே 1967ல் நடந்த பொதுத் தேர்தலில் தமிழ் நாட்டில் காங்கிரஸ் கட்சி படுதோல்வியுற்று அத்தோடு அக்கட்சி தமிழ்நாட்டில் தலைதூக்க முடியாமல் வீழ்ச்சியுற்றது.

1967-ல் நடந்த தேர்தலில்போது பெரியார் ஈ.வே.ரா ஆதரித்து வந்த காங்கிரசும், காமராஜரும் தோற்று, அறிஞர் அண்ணா முதல்வரானதை விரும்பாத பெரியார் ஈ.வே.ரா. 01.10.1967ல் ‘விடுதலை’ .இதழில் ‘‘தமிழனுக்கு இன உணர்ச்சி இல்லை. ஒருவரை ஒருவர் காலை வாரிவிடும் துரோகச் செயல், ஒருவன் மீது ஒருவன் பொறாமை கொள்ளும் இழிசெயல் இல்லாத தமிழன் அரசியலிலோ, மத இயலிலோ, தமிழ் இயலிலோ, தமிழனில் நூற்றுக்கு பத்து பேர் இருக்கிறார்கள் என்று யாராவது காட்டமுடியுமா?’’ என்று வெளியிட்டுள்ளார். அதன் பொருள் தமிழனாகிய அறிஞர் அண்ணா மற்றொரு தமிழனாகிய காமராஜரை காலைவாரிவிட்டார் என்பதுதான்.

“பெரியார் ஈ.வே.ராவின் பேச்சுக்களையும் செயல்களையும் வைத்துப் பார்க்கும்போது அவர் தமிழர் மீதும், தமிழ் மொழி மீதும் வைத்திருந்த பற்றும், பாசமும் உண்மை இல்லை என்பதும், இந்தியை அவர் உள உணர்வோடு எதிர்க்கவில்லை என்பதும், பார்ப்பனர்கள் மீது அவர் கொண்டிருந்த வெறுப்புதான் இந்தியை அவர் எதிர்க்க காரணம் என்ற உண்மையுமன்றோ புலப்படுகிறது’’

(புதிய கோடாங்கி, ஏப்ரல்-2003)

கவிஞர் கலைக்களஞ்சியம் சொல்வதுபோல ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய ஹிந்தி மொழி எதிர்ப்புக்குக் காரணம்

பார்ப்பனர்களின் மேல் இருந்த வெறுப்புதான் என்பதை அறியலாம்.

மேலும் ஒரு கருத்தை மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரும் கூறுகிறார்.

பாவாணர், "(பெரியார்)... இந்தியையும் தமிழ்ப்பற்றால் எதிர்க்கவில்லை. பேராயத்தைத் தாக்க இந்தியெதிர்ப்பு ஒரு நல்ல கருவியாய்க் கிடைத்ததென்றே வெளிப்படையாய்ச் சொன்னார்" என்று கூறுகிறார். (நூல்: பாவாணர் வரலாறு)

ஆக இந்தியெதிர்ப்பு தமிழ்ப் பற்றால் அல்ல என்பது தெளிவாகிறது.

இனி நந்தன் இதழ் விஷயத்திற்கு வருவோம். ஹிந்தியை எதிர்த்த அதே நேரத்தில் ஆங்கிலத்தையும் எதிர்க்க தவறிவிட்டதற்கு காரணம் ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான். ஆம். அந்த வரலாற்றுப் பிழையைச் செய்து ஈ.வே.ராமசாமி நாயக்கர்தான். ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு இருந்த ஆங்கிலப் பற்றுதான், அதை எதிர்க்க தவறிவட்டதற்கு காரணம். நாம் ஏற்கனவே ஈ.வே. ராமசாமி நாயக்கரின் ஆங்கிலமோகம் பற்றி பார்த்தோமல்லவா!

மேலும், நந்தன் இதழ் கொண்டாடுகிற ஈ.வே. ராமசாமி நாயக்கரின் ஆங்கில மோகத்தைப் பார்ப்போம்.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறுகிறார்:-

*நான் கல்லூரியில் ஆங்கிலத்தில் பாடம் சொல்லித்தர வேண்டும் என்றும் மூன்றாம் வகுப்பிலிருந்து மாத்திரமல்லாமல் எழுத்தாணிப் பால் குடிக்க வைக்கும் போதே ஆங்கிலத்தில் துவைத்துக் கொடுக்க வேண்டும் என்றும் சொல்லுகிறேன்.

(விடுதலை. 18-10-1962)

*ஆங்கிலம் சீர்திருத்தத்திற்கு ஏற்ற பொருள் உள்ள மொழி, எளிதில் மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய மொழி. ஆங்கிலம் எந்த அளவுக்கு வளர்கிறதோ அந்த அளவுக்கு நாம் அறிவு பெற முடியும். ஆகையால் ஆங்கிலம் வளர வேண்டும்.

(விடுதலை. 06-07-1968)

*மற்ற உலக நாடுகள் பெற்றுள்ள வளர்ச்சியும் விஞ்ஞான அறிவும் நமக்கு வேண்டாமா? தமிழையும் இந்தியையும் பார்த்துக் கொண்டிருந்தால் எந்த அறிவுதான் நமக்கு வரும்? உலக அறிவைப் பங்கு போட்டுக் கொள்ள ஆங்கிலமொழி அவசியம் நமக்குத் தேவை.

(விடுதலை. 29-06-1968)

**ஆங்கில மொழியை அறிந்தவன் உலகத்தின் எந்தக் கோடிக்கும் சென்று அறிவைப் பெற்றுத் திரும்பிவர இயலும்.*

(பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள் தொகுதி-II)

*இதிலிருந்து தெரிவதென்ன? ஆங்கிலத்தை எதிர்க்காததற்குக் காரணம் ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய ஆங்கில மோகம்தான் என்பது தெளிவாகிறதல்லவா!*

*ஈ.வே. ராமசாமி நாயக்கர் கருத்துக்களைத் தாங்கி வரும் நந்தன் இதழ், ஆங்கிலம் வேண்டும் என்று சி. சுப்பிரமணியம் சொன்னதால் அவரை முதிர்ந்த குழப்பவாதி என்கிறது. 'நந்தன்' வழிப்படிப் பார்த்தால் ஆங்கிலம் வேண்டும் என்று சொன்ன ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூட முதிர்ந்த குழப்பவாதிகள்! ஆம். 'நந்தன்' கொள்கைப்படி ஈ.வே. ராமசாமி நாயக்கர் குழப்பவாதிதான்.*

*நந்தன் இதழ், ஆங்காங்கே முளைவிடும் இத்தகைய (ஆங்கிலம் வேண்டும்) அடிமைச் சிந்தனைகளையும் நாம் மூர்க்கமாக எதிர்த்திட வேண்டும் என்று சொல்கிறது. 'நந்தன்' வழிப்படி,*

முதலில் எதிர்க்க வேண்டியது ஆங்கிலம் பற்றிய ஈ.வே. ராமசாமி நாயக்கரின் அடிமைச் சிந்தனைகளைத்தான்.

ஏனென்றால் ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய ஆங்கிலமோகம் பற்றியக் கருத்துக்களை தமிழர்கள் படிக்கும்போது அந்த அடிமைச் சிந்தனையில் அகப்பட்டுக்கொள்ள நிறைய வாய்ப்பு இருக்கிறது. அதனால் ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்ன ஆங்கில மோகம் பற்றியக் கருத்துக்கள் ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய அறியாமையின் விளைவால் எழும் வீண்வாதங்கள் என்று கருதி தமிழர்கள் அதை ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும்.

நந்தன் சொன்னபடி, எதிர்வரும் நூற்றாண்டிலும் தமிழர்கள் இரண்டாந்தரக் குடிமக்களாகக் கூட அல்ல, மூன்றாந்தரக் குடிமக்களாக வாழ நேரிடும் அவலநிலைக்கு வராமல் தடுக்க வேண்டுமென்றால் ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய ஆங்கிலமோகம் பற்றியக் கருத்துக்களை தமிழர்கள் முதிர்ந்த குழப்பவாதியின் கருத்தாகக் கருதி அதை ஒதுக்கிவிட வேண்டும்.

(‘நந்தன்’ இதழின்படிப் பார்த்தால், ‘நந்தன்’ இதழ் எதிர்க்க வேண்டியது ஈ.வே. ராமசாமி நாயக்கரைத்தான், சி. சுப்பிரமணியத்தை அல்ல. ஆங்கிலம் வேண்டும் என்று சொன்ன சி. சுப்பிரமணியம் மட்டும் முதிர்ந்த குழப்பவாதியாம். ஆனால் ஆங்கிலம் வீட்டுமொழியாக, நாட்டுமொழியாக ஆக வேண்டும்

என்று சொன்ன ஈ.வே. ராமசாமி நாயக்கர் மட்டும் தமிழுக்காக பாடுபட்டவராம். ‘நந்தன்’ இதழின் இந்த ஓரவஞ்சனையை என்னவென்று சொல்லுவது?

ஈ.வே.ராவைப் பற்றி பாவாணர்:

ஈ.வே. ராமசாமி நாயக்கர் தமிழுக்காக என்ன செய்தார் என்ற கேள்வி நமது உள்ளங்களிலே எழுமானால் அதற்கு விடையாக ஒன்றுமில்லை என்ற பதில்தான் வரும். ஆனால் தமிழுக்காக ஒன்றுமே செய்யாத ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஆங்கிலத்திற்காக நிறைய செய்திருக்கிறார். இதை நாம் ஆதாரம் இல்லாமல் சொல்லவில்லை. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு ஒரு கடிதம் எழுதினார். அதிலிருந்து பல தகவல்களை நாம் அறிந்து கொள்ளலாம். இதோ அந்த கடிதம்!

தமிழ் நாட்டுத் தந்தை ஈ.வே.ரா. பெரியார் அவர்கட்கு ஞா. தேவநேயன் எழுதுவது, வேண்டுகோள்.

அன்பார்ந்த ஐயா,

வணக்கம்.

தாங்கள் இதுவரை அரை நூற்றாண்டாகக் குமுகாயத்(சமுதாய) துறையிலும் மதத்துறையிலும் தமிழ்நாட்டிற்கு செய்து வந்த அரும்பெருந்தொண்டு அனைவரும் அறிந்ததே. ஆயின் மொழித்துறையில் ஒன்றும் செய்யவில்லை. ஒரு நாட்டு மக்கள் முன்னேறும் ஒரேவழி அவர் தாய்மொழியே. ஆசிரியப் பயிற்சிக் கலைக்கல்லூரி தாங்களே ஒன்று நிறுவினீர்கள். ஆங்கிலக் கலைக்கல்லூரி ஒன்றிற்கு ஐந்திலக்கம் உரூபா மானியமாக உதவினீர்கள். இந்நாட்டு மொழியாகிய தமிழை வளர்க்க ஒரு கல்லூரியும் நிறுவவில்லை.

ஆதலால், தாங்கள் பெயர் என்றும் மறையாமலும் தங்கள் தொண்டின் பயன் சிறிதும் குறையாமலும் இருத்தற்குக் கீழ்க்காணுமாறு பெரியார் தென்மொழிக் கல்லூரி எனச்

சென்னையில் ஒரு கல்வி நிலையம் இயன்ற விரைவில் நிறுவுமாறு தங்களை வேண்டுகிறேன்.

அன்பன்

ஞா. தேவநேயன்.

குறிப்பு:- திருவள்ளுவர் ஆண்டு 2000 ஆடவை கங-ஆம் பக்கத்தில் 25-06-1969 அன்று இதன் சுருக்கம் வேலூர் நகர சபைத்தலைவர் திரு.மா.பா.சாரதி அவர்களின் தம்பி மகன் திரு.அன்பழகன் திருமண விழாவிற்குத் தலைமை தாங்கிய பெரியார் அவர்களிடம் என்னால் நேரிற் கொடுக்கப்பெற்றது. இன்னும் மறுமொழியில்லை.

ஞா.தே.

(தென் மொழி. 7:10, 11 பக்கம்-22-24)

(நூல்:- பாவாணர் வரலாறு)

இந்த கடிதத்திலிருந்து நமக்கு தெரிவதென்ன? ஈ.வே. ராமசாமி நாயக்கர் மொழித்துறையில் அதாவது, தமிழுக்காக ஒன்றும் செய்யவில்லை என்று, நாம் கூறவில்லை; தமிழுக்காக தன்

வாழ்நாள் எல்லாம் உழைத்திட்ட பாவாணர் கூறுகிறார். இத்தனைக்கும் பல ஆண்டுகள் பாவாணர் ஈ.வே. ராமசாமி நாயக்கருடன் இணைந்து சமூகப் பணியாற்றியவர். ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான் தமிழக மக்களின் மூடநம்பிக்கைகளை ஒழித்திட்டவர் என்றெல்லாம் பாராட்டிய பாவாணர் தான் ஈ.வே.ரா. மொழித்துறையில் ஒன்றுமே செய்யவில்லை என்று கூறுகிறார்.

மேலும் ஆங்கில கலைக்கல்லூரிக்கு ஈ.வே.ரா ஐந்திலக்கம் ரூபாய் கொடுத்துள்ளார். தமிழ்வழிக் கல்லூரிக்கு அல்ல. தமிழுக்கு ஒன்றுமே செய்யாத ஈ.வே.ராவைத்தான் தமிழுக்காகப் பாடுபட்டவர் என்று சொல்லித் திரிகின்றோம். இது வெட்கக்கேடான விஷயமல்லவா!

இதிலே கவனிக்கப்பட வேண்டிய மற்றொரு விஷயம், பாவாணர் கடிதத்தை நேரில் கொடுத்தும் ஈ.வே. ராமசாமி நாயக்கரிடமிருந்து பதில் இல்லை. ஈ.வே.ராவுக்கு தமிழ்மொழிமேல் பற்று இருந்தால்தானே பதில் கடிதம் அனுப்புவார்? அவரிடமிருந்து பதில் எதிர்பார்த்தது மலடியிடம் பிள்ளையை எதிர்ப்பார்ப்பது போல்.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் தமிழ்மொழியை மட்டும் வெறுக்கவில்லை. தமிழ்ப் புலவர்களைக் கூட வெறுத்தார்.

சங்ககாலப் புலவராகட்டும் அல்லது அவருடன் வாழ்ந்த பகுத்தறிவுப் பாசறையில் வளர்ந்த கவிஞர்களாகட்டும் – அவர்கள் தமிழ் புலவர்களாக, கவிஞர்களாக இருந்தால் அவர்களின் மேல் ஈ.வே.ராக்கு வெறுப்புத்தான் இருக்கும்.

தொல்காப்பியர், திருவள்ளுவர், கம்பர் போன்ற சங்ககாலப் புலவர்களை ஈ.வே.ரா. எப்படியெல்லாம் திட்டினார் என்பதை ஏற்கனவே பார்த்தோம்.

அதேப்போல் பாரதிதாசனும், பட்டுக்கோட்டை அழகிரிசாமியும் ம. பொ. சிவஞானமும் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் வெறுப்புக்குத் தப்பவில்லை. இவர்கள் ஆதரிப்பவர்களையும் ஈ.வே. ராமசாமி நாயக்கர் வெறுத்தார். அந்த உண்மைகளைச் சற்றுப் பார்ப்போம்.

பாரதிதாசனுக்குப் பணம் எதற்கு?

பாட்டின் மூலம் நாட்டின் மறுமலர்ச்சிக்குத் தேவையான பகுத்தறிவுச் சிந்தனையையும், தனித்தமிழ்ப் பற்றையும் வளர்த்த பெருமை பாவேந்தர் பாரதிதாசனையே சாரும். அவரை சிறப்பிப்பது தமிழன்னையைச் சிறப்பிப்பது போன்றதாகும் என்று அண்ணா கருதினார். ஆகவே தோழர்கள் முல்லை முத்தையா,

டி.என். இராமன் முதலானோரின் ஒத்துழைப்புடன் கவிஞருக்கென ரூ. 25,000 ரூபாய் திரட்டப்பட்டது.

28.07.1946 ஆம் ஆண்டு ஞாயிறு அன்று நாவலர் ச. சோமசுந்தர பாரதியார் தலைமையில் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பாரதிதாசனுக்கு பொற்கிழி வழங்கப்பட்டது.

பகுத்தறிவுவாதிகளுக்கெல்லாம் அன்று ஒரே சந்தோஷம்.

ஏன் தெரியுமா?

சுயமரியாதை இயக்கத்தின் புரட்சிக்கவி என்று பாராட்டப்பட்ட பாரதிதாசன் அவர்களது தமிழுக்கு அங்கீகாரம் பெற்ற விழா எனலாம் இதனை! அதோடு மாற்றார் எவ்வளவு இருட்டடிப்புச் செய்திடினும் எங்களாலும் பணம் சேர்த்து முடிப்பு அளிக்க முடியும் என்பதை உணர்த்திய விழா.. சுயமரியாதைக்காரன், நாஸ்திகன் என்று ஏளனமாகக் கருதப்பட்டவர்களுக்கும் ஒரு கவிஞன் உண்டு. அவன் புரட்சிக் கவிஞன் என்றெல்லாம் சொல்லி ஆடிப்பாடி மகிழ்ந்தனர்.

ஆனால் ஒரே ஒரு தலைவருக்கு மட்டும் இதில் உடன்பாடு இல்லை. அவர் யார் தெரியுமா?

ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான்.

அவருக்குத்தான் இதில் சற்றும் உடன்பாடு இல்லை. ஈ.வே. ராமசாமி நாயக்கர் ‘‘பாரதிதாசனுக்கு என்ன வந்தது? இரண்டு பாட்டுப் பாடிவிட்டால் ஒரு புலவர். அவருக்கெல்லாம் பண முடிப்பு. இதற்கெல்லாம் அண்ணாத்துரையின் முயற்சி. எதற்கும் கேட்டுச் செய்ய வேண்டாமோ’’ என்று கண்டித்தார்.

(நூல்: பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு – மறைமலையான்)

பாரதிதாசனுக்கு பணமுடிப்பு என்று சொன்னவுடன் ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு எவ்வளவு வெறுப்புப் பாருங்கள். இவருக்கு பணமுடிப்பு கொடுத்தால் சந்தோஷமாக ஏற்றுக் கொள்வார். ஆனால் பாரதிதாசனுக்கு பணமுடிப்புக் கொடுத்தால் வெறுப்பைக் கக்குவார்.

கேட்டுச் செய்ய வேண்டாமோ என்று கேட்கிறார். கேட்டிருந்தால் கண்டிப்பாக ஒத்துக் கொண்டிருக்கமாட்டார் என்பதை அவரது பேச்சிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். மேலும் ஈ.வே. ராமசாமி நாயக்கரும் பல விஷயங்களை கழகத்தவரை, முக்கியமாக அப்போது பொதுச் செயலாளராக இருந்த அண்ணாதுரையை,

கேட்காமலேயே செய்திருக்கிறார். 1947-ஆகஸ்ட்டு 15ம் நாள் திராவிடருக்குத் துக்கநாள் என்று ஈ.வே. ராமசாமி நாயக்கர் எவரையும் கலக்காமல் அறிக்கைவிட்டார். தன்னுடைய திருமணம் போன்ற விஷயங்களில் கூட கழகத்தவரை கேட்காமலேயே செய்திருக்கிறார்.

அதனால் கேட்டு, செய்ய வேண்டாமோ என்ற கேள்வியை கேட்க ஈ.வே. ராமசாமி நாயக்கருக்குத் தகுதியில்லைதானே!

## பெரியாரின் மறுபக்கம் – பாகம் 5 (பெரியாரும் இஸ்லாமின் சாதியும்)

இஸ்லாமின் சாதியைப் பற்றிய ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பொய்:

ஈ.வே. ராமசாமி நாயக்கரும், வீரமணியும் பொய் சொல்வதில் எவ்வளவு வல்லவர்கள் என்பதற்கு ஒரு நல்ல உதாரணம், இஸ்லாமில் ஜாதியைப் பற்றிய இவர்களுடையப் பிரச்சாரங்கள்.

இஸ்லாமில் சாதி இல்லையாம், ஈ.வே. ராவின் பிதற்றல்!

இந்துமதத்தில் பல ஜாதிகள் இருக்கின்றன. இந்து மதத்தில் மட்டுமே உயர்வு-தாழ்வுகள் கற்பிக்கப்படுகின்றன-என்று சொல்லும் ஈ.வே. ராமசாமி நாயக்கர் இஸ்லாமைப் பற்றி என்ன சொல்கிறார் தெரியுமா? இதோ!

* இந்து மதத்தைவிட மகமதிய மதம் மேலானதே! ஏனென்றால் அதில் ஒற்றுமை, சமத்துவம், விக்கிர ஆராதனை மறுப்பு ஆகியவைகள் இருக்கின்றன.

(குடியரசு 03.11.1929)

* தீண்டாமையை ஒழித்து மகமதிய மதமே! இஸ்லாம் மதத்தில் ஜாதி உயர்வு-தாழ்வு இல்லை.

* இஸ்லாம் மார்க்கத்தில் பார்ப்பார முஸ்லிம், பறை முஸ்லிம், நாயுடு முஸ்லிம், நாடார் முஸ்லிம் என இருக்கின்றதா என்று கேட்கின்றேன்.

(குடியரசு 02.08.1931)

* மதங்கள் ஒழிந்த பிறகுதான், உலக சமாதானமும், ஒற்றுமையும் சாந்தியும் ஏற்பட முடியும் என்பத அநேக அறிஞர்களது அபிப்பிராயமானாலும், அதற்கு விரோதமாக ஏதாவது ஒரு மதம்

இருக்கும் போது உலக சமாதானம் ஏற்பட்டுவிட்டது. சாந்தி ஏற்பட்டுவிட்டது என்று சொல்லப்படுமானால் அது இஸ்லாம் கொள்கைகளாகத்தான் இருக்கக்கூடும் என்று கருதுகிறேன்.

(குடியரசு 23.08.1931)

* தீண்டாமை மாத்திரம் ஒழிய வேண்டும் என்று ஆசைப்பட்டு, அதற்காக மகமதியராகிவிடலாம் என்று அவர்கள் கருதினால் அதில் நமக்கு இருக்கும் ஆட்சேபனை என்ன என்று கேட்கின்றோம்.

(குடியரசு 17.11.1935)

* இப்போது வரவர இந்திய மனித சமூக ஒற்றுமைக்கும், சுதந்திர சித்திக்கும் கூட இந்திய மக்கள் முஸ்லிம்களாக ஆகிவிட்டால் பயன்படும் என்றும் நினைக்கிறேன்.

* முஸ்லிம் சமூகத்தைப் பெருக்கி தீண்டாமையை ஒழிப்பதோடு, இந்தியாவை விடுதலையடையும்படிச் செய்யுங்கள்.

(குடியரசு. 19.01.1936)

* அடியோடு தீண்டாமை ஒழிய வேண்டுமானால் இஸ்லாம் மத வேஷம் போட்டுக் கொள்வது மேல் என்று கருதுகின்றேன்.

(குடியரசு 31.05.1936)

* கிறிஸ்தவ மதமும், இஸ்லாமிய மதமும் ஒரு கடவுள்தான் உண்டு, மக்களில் ஒரு ஜாதிதான் உண்டு என்று சொல்கின்றன.

* இங்கு இந்துமதத்தில் பறையனாகவோ, சண்டாளனாகவோ, சூத்திரனாகவோ இருக்கிறவன், வேறு மதத்திற்கு, சிறப்பாக இஸ்லாம் மதத்திற்கு போனால் அந்த மதத்தாருள் அவன் சரிசமமான மனிதனாக ஆகிவிடுகிறான் என்பதல்லாமல் நஷ்டமென்ன, கஷ்டமென்ன என்று கேட்கிறேன்.

(நூல்:- மதமாற்றமும், மதவெறியும்)

அதாவது இஸ்லாமில் ஜாதி இல்லை. இஸ்லாமில் உயர்வு-தாழ்வு இல்லை. அங்கு எல்லோரும் சமம். இதுதான் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கருத்து. இதுபோலவே வீரமணியும் ‘சங்கராச்சாரியார்’ என்ற நூலில் ‘சாதி என்று வரும்போது அது இந்த இந்து மதத்தைத் தவிர வேறு எந்த மதத்திலே உண்டு?’ என்று கேட்கிறார். ஆக இந்து மதத்தைத் தவிர வேறு மதத்தில் ஜாதி இல்லை என்று ஈ.வே. ராமசாமி நாயக்கரும், வீரமணியும் கூறுகிறார்கள். குறிப்பாக இஸ்லாமில் ஜாதி இல்லை என்று கூறுகிறார்கள்.

இஸ்லாமில் ஜாதி இல்லை என்று கூறுகிறார்களே – இதுவாவது உண்மையா என்று பார்க்கலாம்.

இஸ்லாமின் சாதிப் பட்டியல் இதோ!

‘Social Stratification Among Muslim – Hindu Community’ என்ற நூலில் A. F. இமாம் அலி என்பவர் கூறுகிறார்:-

முகமதியர் ஆட்சிக் காலத்திலேயே, முகமதிய சமூகம் கீழ்கண்டவாறு பிரிந்திருந்தது.

1. உயர்சாதி முகமதியர்கள்.
2. வீட்டுவேலை செய்பவர் மற்றும் அடிமைகள்
3. பொது ஜனங்கள், மற்றவர்கள்

உயர்சாதி முகமதியர்கள் கீழ்கண்டவாறு பிரிக்கப்படுகின்றனர்:-

1. அஹல் இ. தௌலத்: ஆளுகின்ற வர்க்கத்தினர். இதில் அரச குடும்பத்தினர், பிரபுக்கள், இராணுவ அதிகாரிகள் அடங்குவர்.

2. அஹல் இ. சஅதாத்:- அறிவுஜீவி வர்க்கத்தினர். இதில் இறையியல், நீதித்துறை, மதகுருமார்கள், சையது முதலியோர், கவிஞர்கள், எழுத்தாளர்கள் அடங்குவர்.

3. அஹல் இ. மூராத்:- மகிழ்ச்சியூட்டும் வர்க்கத்தினர், இசை வல்லுனர்கள், நாட்டிய வல்லுநர்கள் முதலியோர் அடங்குவர்.

இவர்களுக்குள் உள்ள சாதிச் சண்டைகள் இன்றும் இஸ்லாமிய நாடுகளிலேயே காணலாம். மேலும் பல பிரபலமான பிரிவுகள் உள்ளன. அவைகளை Caste and Social Stratificationa Among Muslim in India என்ற நூலில் இம்தியாஸ் அகமத் என்பவர் கூறுகிறார்:-

1. கன்னிகள்:- ஹனபீ, ஷாபீயீ, மாலிகீ, ஹம்பல் பிரிவுகள், இமாம் ஜாஃபர்தூஸி (தபிஸ்தான் என்ற நூலில் குறிப்பிட்டபடி)

கன்னிகளுக்குள் 65 பிரிவுகள் இருந்ததாக குறிப்பிடப்பட்டுகிறது. இன்றும் இந்நான்கு பிரிவுகளில் பல உட்பிரிவுகள் உள்ளன.

2. ஷியாக்கள்:- ஜைதிய்யா, இஸ்மாயீலி/சபியுன், அஸ்னா

அஷ்ரிய்யா/இமாமீயா/கைஸானியா/ஹாஸிமீயா, காலியா/குல்லத்
இவ்வைந்து பிரிவுகளுக்குள்ளும் பல பிரிவுகள் உள்ளன.

3. காரிஜிக்கள் (வெளியேறிவிட்டோர்)

4. முஃதஸிலா ( நடுநிலையாளர்)

5. முர்ஜிகள் (தாமதப்படுத்துவோர்)

6. வஹாபிகள் (அடிப்படைவாத பிரிவுகள் பல உண்டு)

7. பஹாவீ

8. ஸனூஸி

9. கைதியானி

10. அஹ்மதியா

11. ஸீபிகள்

இதைத்தவிர ரவாண்டிகள் (பிறவி சுழற்சி கோட்பாட்டில் நம்பிக்கையுடையவர்கள்) ஸஃபித்ஜாமகன் (கடவுள் மனித உருவில் அவதாரம் எடுத்தார் என்ற கோட்பாடு கொண்டவர்கள்)

ரெளஸேனியர்கள், அக்பாரிகள், க்வாஜாரிகள் (அஜாரிகா, இபாதியா, நேஜ்தட் அஜாரியா, அஜ்ரிதா, ஸூஃபாருஜ் ஜியாதியா பிரிவுகள் உள்பட). பாபிக்கள் முதலிய பிரிவுகள்.

இந்தியாவிலேயே மதமாறிய முஸ்லிம்கள் பல மாநிலங்களில் OBC பிரிவுகளில் சேர்க்கப்பட்டுள்ளனர். அச்சாதியினர் பின்வருமாறு:

1. ஆந்திரா – மஹாதர்

2. அஸ்ஸாம் – மைமால் (மீன்பிடிப்பவர்) மணிப்பூர் முஸ்லிம்கள்.

3. பீஹார் – பதியரா, சிக், தஃஃலாங்கே, தஃஃபாலே, ஃஃபகீர், கதிஹர், ஹீமா, கரஞ்சியா, துஸ்ஸ ¡ர், தர்ஜி, கஸாய், பங்கி, மதாரி, மிரியாஸின், மர்ஸிகா, மோமின், முக்ரோ, நட், பமானியா, ரங்ரீஜ், சாயி, தாகுரை.

4. குஜராத் – பஃஃவான், தேஃஃபர், ஃஃபகீர், கதாய், கலியவா, கஞ்சி, ஹிங்கோரா, ஜட், தாரி, ஹ லாரிகாத்தி, தர்பன், மக்ரானி, மௌசாரி, குரேஸி, மியானா, மீர், மிராசி, பஞ்சார ¡, சந்தி, பத்னி, ஜாமாத், துர்க், ஜமாத், தேபா, வாகேவ்

5. ஜம்மு-காஷ்மீர் – பட், தார், தூம், தூமா, ஹஜ்ஜன், ஜூலாஹா, லோஹர், லோனே, குல்ஃஃபகீர், கும்ஹார், மோசி, தேலி, நல்பந்த்

6. கர்நாடகம் – அன்சாரி, ஜூலாய், தம்போரி, யேரி, சஃஃபார்பந்தி, தர்ஜி, தோபி, ஃஃபகீர், தகராஸ், ஜர்கள்

7. கேரளம் – மோப்ளா (மாப்பிள்ளை)

8. பஞ்சாப் – பகிர், மேகாதி

9. ராஜஸ்தான் – ஜூலாஹா

10. உத்திரபிரதேசம் – அன்சாரி, கஸாப், பஞ்சாரா, காயஸ்தா

11. மேற்கு வங்காளம்- அன்சாரி, பகிர், சைன்

மேற்கண்ட உதாரணங்கள் எதைக்காட்டுகின்றன?

இஸ்லாமிலும் சாதிகள் உண்டு என்பதைத்தானே! இந்த சாதிகள் பற்றி ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கும் வீரமணிக்கும் தெரியாதா? தெரியாது என்று இவர்கள் சுலபமாகப் பொய் சொல்லிவிடுவார்கள். அதனால் இவர்களுக்கு தெரிந்த மாதிரி மேலும் ஓர் ஆதாரத்தை நாம் காட்டலாம்.

இஸ்லாமின் சாதிப் பற்றி அம்பேத்கர்!

அம்பேத்கர்

அம்பேத்கர்

ஈ.வே. ராமசாமி நாயக்கரும், டாக்டர் அம்பேத்கரும் ஒரு நாயணத்தின் இருபக்கங்கள் என்று சொல்கின்றார்களே, அந்த ஒரு நாணயத்தின் ஒரு பக்கமான டாக்டர் அம்பேத்கர் ‘பாகிஸ்தான் அல்லது இந்தியப் பிரிவினை’ என்ற நூலில் கூறுகிறார்:-

”பொதுவாக, முகமதியர்கள் ஷேக்குகள், சையத்துகள், மொகலாயர்கள், பட்டாணியர்கள் என நான்கு இன மரபுக் குழுக்களாகப் பிரிந்திருப்பதுதான் வழக்கம். ஆனால் இது வங்க மகாணத்துக்குச் சிறிதும் பொருந்தாது. முகமதியர்கள் இரண்டு பிரதான சமூகப் பிரிவினைகளை ஒப்புக்கொள்கின்றனர். 1. அஷ்ராஃப் அல்லது ஷராஃப், 2. அஜ்லாஃப் ஆகியவையே அவை.

அஷ்ராஃப் என்பதற்கு ”உயர் குடிமகன்” என்று பொருள். ஐயத்துக்கிடமற்ற அயல்நாட்டு வழித்தோன்றல்களும், மேல்சாதி இந்துக்களிலிருந்து மதம் மாறியவர்களும் இப்பிரிவில் அடங்குவர். தொழில் புரிவோர் உள்பட இதர எல்லா முகமதியர்களும், கீழ்ச் சாதிகளிலிருந்து மதம் மாறியவர்களும் அஜ்லாஃபுகள், ஈனர்கள், இழிந்தவர்கள், கடைகெட்டவர்கள் என்பன போன்ற மிகவும் வெறுக்கத்தக்க பதங்களில் அழைக்கப்படுகின்றனர்.

மேலும், காமினாக்கள், இதார்கள், கீழ்த்தரமானவர்கள் எத்தகைய தகுதியுமில்லாதவர்கள் என்றும் இவர்கள் அழைக்கப்படுவது

உண்டு. ரசில் என்றும் இவர்களைக் கூறுவார்கள். ரிஸால் என்னும் பதத்தின் மொழிச் சிதைவே ரசில் என்பது.

சில இடங்களில் மூன்றாவது ஒரு பிரிவினர் இருக்கிறார்கள். இவர்கள் அர்ஸால் எனப்படுகிறார்கள். ‘அர்ஸால் எனப்படுகிறார்கள். ‘அனைவரிலும் மிகத் தாழ்ந்தவர்கள்’ என்று இதற்குப் பொருள். இவர்களுடன் எந்த முகமதியர்களும் சேர்ந்து பழகமாட்டார்கள். இவர்கள் முசூதிகளில் நுழையவோ, பொது கல்லறைகளை அல்லது இடுகாடுகளை பயன்படுத்திக் கொள்ளவோ அனுமதிக்கப்படமாட்டார்கள்.

இந்துக்களைப் போன்றே முஸ்லிம்களிடையேயும் சமுதாயத்தில் அவரவர் வகிக்கும் அந்தஸ்தைப் பொறுத்து சாதிப்பாகுபாடுகள் தலைவிரித்தாடுகின்றன.

I. அஷ்ராஃப்கள்-உயர்மட்டத்திலுள்ள முகமதியர்கள். இப்பிரிவைச் சேர்ந்தவர்கள் வருமாறு:

1. சையத்துக்கள். 2. ஷேக்குகள் 3.பட்டாணியர்கள் 4.மொகலாயர்கள் 5.மாலிக்குகள் 6.மிர்ஜாக்கள்

II. அஜ்லாஃப்-என்பவர்கள் கீழ்மட்டத்திலுள்ள முகமதியர்கள். இவர்களில் பின்வரும் பிரிவினர் அடங்குவர்.

1. பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள ஷேக்குகளும் மற்றும் பூர்வீகத்தில் இந்துக்களாக இருந்து மதம்மாறி அஷ்ராஃப் சமூகத்தில் இடம் பெறாத பிராலி, தக்ராய் போன்றவர்களும்.

2. தார்ஜி, ஜொலாஹா, பக்கீர், ரங்ரெஸ்

3. பர்ஹி, பாதியரா, சிக், சுரிஹார், தய், தவா, துனியா, காத்தி, கலால், கசய், குலா குஞ்சரா, லாஹரி, மஹிஃப்ரோஷ், மல்லா, நலியா, நிகாரி

4. அப்தல், பாகோ, பெதியா, பாட், சாம்பா, தஃபாலி, தோபி, ஹஜ்ஜம், முச்சோ, நகர்ச்சி, நாத், பன்வாரியா, மதாரியா, துந்தியா

III. அர்ஸால் அல்லது மிகவும் கீழ்ப்படியில் இருக்கும் பிரிவினர்.

பனார், ஹலால்கோர், ஹிஜ்ரா, கஸ்பி, லால்பெகி, மௌக்தா, மெஹ்தார்.”

மேலும் இஸ்லாமியர்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்றுள்ள பஞ்சாயத்து முறையைப் பற்றி டாக்டர் அம்பேத்கர் கூறுவதாவது:-

”பஞ்சாயத்தின் அதிகாரம் சமூக விஷயங்களில் மட்டுமன்று வாணிகம் முதலான விஷயங்களிலும் செல்லுபடியாகும். இதர பிரிவுகளைச் சேர்ந்தவர்களுடன் திருமண உறவு கொள்வது ஒரு குற்றமாகக் கருதப்படுகிறது. பஞ்சாயத்து இதில் மிகுந்த கவனம் செலுத்தி உரிய நடவடிக்கை எடுக்கிறது. இதன் விளைவாக இந்துக்களைப் போன்றே முஸ்லிம் பிரிவினரும் மிகப்பல சந்தர்ப்பங்களில் அகமணக் கட்டுப்பாட்டுக்கு மிகக் கண்டிப்பான முறையில் உட்படுத்தப்படுகின்றனர். இந்தக் கலப்பு மணத்தடை முஸ்லிம்களில் மேல்தட்டுப் பிரிவினருக்கும் அதே போன்று கீழ்த்தட்டுப் பிரிவினருக்கும் பொருந்தும். உதாரணமாக, ஒரு துமா இன்னொரு துமாவைத் தவிர வேறு எவரையும் திருமணம் செய்து கொள்ள முடியாது. இந்த விதி மீறப்படுமாயின் அவ்வாறு மீறும் குற்றவாளி உடனே வலுக்கட்டாயமாக பஞ்சாயத்தின் முன் கொண்டுவந்து நிறுத்தப்படுகிறான். அவன் அவமானப்படுத்தப்பட்டு, அவமதிக்கப்பட்டு அவனது சமூகத்தில் இருந்து வெளியேற்றபடுகிறான்; இத்தகையப் பிரிவைச் சேர்ந்த ஒருவன் சாதாரணமாக இன்னொரு பிரிவில் தன்னை இணைத்துக் கொள்ளமுடியாது; அவன் தனது வகுப்புக்குரிய தொழிலை கைவிட்டு, பிழைப்புக்காக வேறொரு தொழிலைக் கைக்கொண்டாலும், அவன் எந்த வகுப்பில் பிறந்தானோ அந்த வகுப்புக்குரிய சுட்டுப் பெயருடன்தான் இந்த சமுதாயத்தில் அவன் நடமாட முடியும். ஜொலாஹாக்கள் என்ற பதம் கசாப்புக்கடைக்காரர்களைக் குறிக்கும்; இவர்களில்

ஆயிரக்கணக்கானோர் அந்தத் தொழிலை விட்டுவிட்டபோதிலும் இன்னமும் ஜொலாஹாக்கள் என்றே அழைக்கப்படுகின்றனர்."

இந்தியாவின் இதர மாகாணங்களிலும் இதே போன்ற நிலையே நிலவுகிறது. இது சம்பந்தமான விவரங்களை அந்தந்த மாகாணங்களின் குடி மதிப்புக்கணக்கு அறிக்கைகளில் காணலாம். ஆர்வமுள்ளவர்கள் அவற்றைப் படிக்கலாம். இது எப்படியிருப்பினும் வங்காளம் நமக்கு என்ன உண்மையைப் புலப்படுத்துகிறது? முகமதியர்கள் சாதிமுறையைப் பின்பற்றுவதோடு தீண்டாமையும் கைக்கொள்கின்றனர் என்பதையே அது காட்டுகிறது.

ஆக, இந்து சமுதாயத்தைப் பீடித்துள்ள அதே சமூகத் தீமைகள், கேடுகள் இந்தியாவிலுள்ள முஸ்லிம் சமுதாயத்தையும் பெரிதும் தொற்றிக்கொண்டுள்ளன என்பதில் எத்தகைய ஐயத்துக்கம் இடமில்லை. இன்னும் சொல்லப்போனால், முஸ்லிம்கள் இந்துக்களுக்குள்ள அனைத்தும் தீமைகளையும் வரிந்துக் கொண்டிருப்பது மட்டுமல்லாமல், அதற்கும் அதிகமான ஒன்றையும் பெற்றிருக்கின்றனர். அந்த அதிகமான ஒன்றுதான் முஸ்லிம் பெண்களிடையே நிலவும் பர்தா முறையாகும்."

குடிமதிப்புக் கணக்குக் கண்காணிப்பாளர் கூறியதாக டாக்டர் அம்பேத்கர் குறிப்பிடுகின்ற இந்த இஸ்லாமிய சாதிகள் கூட ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கும், வீரமணிக்கும் தெரியாது என்று

சொல்லிவிட முடியாது. ஆனாலும் இஸ்லாமில் சாதி இல்லை என்று இவர்கள் மறுபடியும், மறுபடியும் பொய் சொல்வதற்குக் காரணமென்ன?

ஒன்று இஸ்லாமில் உள்ள சாதிகளை மூடிமறைத்து அம்மதத்துக்கும் இந்துக்களை மதமாற்ற உதவி செய்வதன் மூலம் இஸ்லாமியர்களிடமிருந்து தங்கள் அமைப்புக்கு பணம் பெறுவது.

இரண்டாவது, இஸ்லாமியர்களை விமர்சித்தால் தம் உயிருக்கு பாதகம் எற்படும் என்ற பயம்.

மூன்றாவது தங்களுடைய கருத்துக்கு எப்பொழுதும் யாராலும் மறுப்பு சொல்ல முடியாது என்ற ஆணவம்.

இவைகள்தான் காரணமாக இருக்க முடியும் என்று தோன்றுகிறதல்லவா! உண்மைகள் அவர்களுக்கே வெளிச்சம்!

ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பொய் ஒரு புறமிருக்கட்டும். வீரமணி என்ன சொல்கிறார்? இந்து மதத்தைத் தவிர வேறுமதத்தில் சாதி இல்லையாம். இஸ்லாமிலே சாதி இருக்கின்றது என்று பார்த்தோம். அடுத்து இவருடைய தந்தை? ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொல்வதை கவனியுங்கள்:-

பிரத்தியட்சத்தில் பறைக் கிறிஸ்துவன், பார்ப்பாரக் கிறிஸ்துவன், வேளாளக் கிறிஸ்துவன், நாயுடு கிறிஸ்துவன், கைக்கோளக் கிறிஸ்துவன், நாடார் கிறிஸ்துவன் என்பதாக தமிழ்நாடு முழுவதும் இருப்பதைப் பார்த்து வருகின்றேன். (குடியரசு 02-08-1931)

தீண்டாமை இல்லாத சமயங்கள் பல இருப்பதாகச் சொல்லிக் கொள்ளலாம். பிரம்ம சமாஜத்தில் சேர்ந்தால் தீண்டாமை ஒழிக்கப்பட்டு விடவில்லை. பவுத்த மதத்திலும், ஜெயின் மதத்திலும் சேர்ந்தால் தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிடவில்லை. கிருத்துவ மதத்தில் சேர்ந்தாலும் தீண்டாமை ஒழிக்கப்பட்டுவிடவில்லை (குடியரசு 19-01-1936)

இதிலிருந்து தெரிவதென்ன?

கிறிஸ்துவ மதத்திலும், பவுத்த மதத்திலும், ஜைனமதத்திலும் தீண்டாமையிருக்கிறது என்பது தானே? வீரமணியுடைய தந்தைக்கு பல மதங்களில் உள்ள தீண்டாமை தெரிகின்றது. ஆனால் பிள்ளைக்கு தெரியவில்லை. இதில் யார் உண்மையை சொல்லியிருக்கின்றனர்?

ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்னதில் தீண்டாமைதானே தவிர சாதி இல்லை என்று வாதிடலாம். ஆனால் சாதி இருப்பதால்தான் தீண்டாமையே இருக்கின்றது என்று இவர்கள்தான் சொல்லி வருகின்றனர். அதனால் தீண்டாமை இருக்கின்றது என்று சொன்னால் அங்கு சாதியிருக்கிறது என்றுதான் அர்த்தம். அதனால் வீரமணி சொல்வது அப்பட்டமான பொய் என்பது தெளிவாகும். ஆனால் பொய் சொல்லி ஏமாற்றி திரியும் இவர்கள் பண்பாடுமிக்கவர்களாம்! இவர்களுடைய இதழுக்கு பெயர் "உண்மை"யாம்! அதைவிட "பொய்மை" என்று வைத்திருக்கலாம் அல்லவா!

## பெரியாரின் மறுபக்கம் – பாகம் 6 (பெரியாரின் கடவுள் நம்பிக்கை!)

ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடு பற்றி உயர்வாகப் பேசுகிறார்களே-அந்த உயர்ந்த பண்பாடு உடைய ஈ.வே. ராமசாமி நாயக்கருடையப் பேச்சுகள் பல எப்படியிருந்தன என்பதைப் பற்றி

பார்க்குமுன் – அவரை விமர்சிக்கும் முன் – ஒன்றை நினைவுப்படுத்திக் கொள்ளவேண்டும்.

அதாவது வீரமணி கூறுகிறார்:-

''பெரியாருடைய கருத்துக்கு ஒருவர் மறுப்புச் சொல்ல வேண்டுமென்று சொன்னால் பெரியாரைப் பற்றி சங்கராச்சாரியார் எழுதிய நூலை ஆதாரமாகக் கொள்ளக்கூடாது. பெரியாரைப் பற்றிப் பெரியார் சுயமரியாதைப் பிரச்சார நிறுவனம் வெளியிட்ட நூலை வைத்துப் போசினால்தான் அது முழுமையான நிலையை அடையும்.''.

ஆகவே வீரமணியின் இந்த கருத்தை நினைவில் கொண்டு விமர்சனத்தை மேலே தொடர்வோம்.

1937-ல் ஈ.வே. ராமசாமி நாயக்கர் 'நவமணி' ஆண்டுமலரில் எழுதுகிறார்:-

''எனக்குச் சிறுவயது முதற்கொண்டு ஜாதியோ, மதமோ கிடையாது. அதாவது நான் அனுஷ்டிப்பது கிடையாது. ஆனால் நிர்ப்பந்தமுள்ள இடத்தில் போலியாகக் காட்டிக் கொண்டிருப்பேன். அதுபோலவே கடவுளைப் பற்றியும் மனதில் ஒரு நம்பிக்கையோ, பயமோ கொண்டிருந்ததும் இல்லை. நான் செய்யவேண்டுமென்று கருதிய காரியம் எதையும் கடவுள் கோபிப்பாரோ என்றோ, தண்டிப்பாரோ என்றோ கருதி (எந்த காரியத்தையும்) செய்யாமல் விட்டிருக்கமாட்டேன். கடவுள் மகிழ்ச்சியடைவாரென்று கருதியோ, சன்மானம் அளிப்பார் என்று கருதியோ எந்த காரியத்தையும் செய்திருக்கவும் மாட்டேன்.

எனது வாழ்நாளில் என்றைக்காவது ஜாதி, மதத்தையோ, கடவுளையோ உண்மையாக நம்பியிருந்தேனா என்று இன்னும் யோசிக்கிறேன். இதற்கு முன்பும் பல தடவை யோசித்திருக்கிறேன். எப்பொழுதிலிருந்து இவைகளில் எனக்கு நம்பிக்கையில்லையென்றும் யோசித்து யோசித்துப் பார்த்திருக்கிறேன். கண்டுபிடிக்க முடியவே இல்லை’’

என்றும்,

90-வது ஆண்டு மலரில்,

‘‘நான் 1920-இல் காங்கிரசில் சேர்ந்தேன். அதற்கு முன்பு 1900 முதல் பார்ப்பனரல்லாதார் நல உணர்ச்சி கொண்டவனாக இருந்துவந்தேன். நான் 1900-க்கு முன்பே கடவுள், மத, ஜாதி விஷயங்களில் நம்பிக்கை இல்லாதவனாக இருந்து வந்தேன்’’

என்றும் கூறுகிறார்.

இதைப் படிப்பவர்களுக்கு ‘அடடா! ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு பிறந்ததிலிருந்தே கடவுள் பற்று இருந்ததில்லை. அவர் ஒரு நாத்திகப் பிழம்பாகத்தான் பிறந்ததிலிருந்தே இருந்திருக்கிறார்’ என்றுதான் தோன்றும். ஆனால் ஈ.வே. ராமசாமி நாயக்கர், ‘பண்பாடு மிக்கவர்,’ ‘பொய் சொல்லாதவர்’ என்றெல்லாம் அவரின் அடியார்கள் மார்தட்டிக் கூறுகின்றார்களே அந்த ஈ.வே. ராமசாமி நாயக்கரின் இந்தக் கூற்று உண்மையா?

எனக்கு சிறுவயது முதற்கொண்டு கடவுள் நம்பிக்கை இல்லை என்று சொல்லும் ஈ.வே. ராமசாமி நாயக்கர் தன்னுடைய 46 வயது வரை கடவுள் பற்று, மதப்பற்றுமிக்கவராக, நம்பிக்கையாளராக

இருந்திருக்கிறார் என்பதுதான் வரலாறு காட்டும் உண்மை. அந்த வரலாற்று உண்மையை, வீரமணி சொல்கின்றாற்போல, ஈ.வே. ராமசாமி நாயக்கருடைய பத்திரிகையான ‘குடியரசு’ இதழிலேயே காண்போம்.

46 வயதுவரை ஈ.வே. ராமசாமி கொண்ட கடவுள் நம்பிக்கை!

ஈ.வே. ராமசாமி நாயக்கரின் முதல் குடியரசு இதழ் 02-05-1925 - இல் வெளியானது. அதில குடியரசு என்று தலையங்கம் இட்டு இவ்வாறு இருக்கிறது:-

‘‘தாய்திரு நாட்டிற்கு யாம் இதுகாறும் இயற்றிவரும் சிறு தொண்டினை ஒரு சிறு பத்திரிகை வாயிலாகவும் எம்மால் இயன்ற அளவு ஆற்றிவரல் வேண்டுமென இரண்டாண்டுகளுக்கு முன்னர் எம்மிடத்து எழுந்த பேரவா இன்று நிறைவேறும் பேற்றை அளித்த இறைவன் திருவடிகளில் இறைஞ்சுகின்றோம்.’’

இவ்வாறு துவங்கும் தலையங்கம்

‘‘இப்பெருமுயற்சியில் இறங்கியுள்ள எமக்குப் போதிய அறிவையும், ஆற்றலையும் எல்லாம் வல்ல இறைவன் தந்தருள்பாலிப்பானாக’’

என்று முடிகிறது.

மேலும் அதே குடியரசில்,

‘‘இம்மண்ணுலகை நீத்து விண்ணுலகமெய்திய செய்தியைக் கேள்வியுற்று நாம் பெரிதும் வருந்துகின்றோம். அவரது இடது கன்னத்தில் முளைத்த சிறு கொப்பளமே அவரது ஆவியைக்

கொள்ளை கொண்ட கூற்றுவன்! அவரது ஆன்மா சாந்தியடைய எல்லாம் வல்ல இறைவன் அருள்வானாக''

என்று இருக்கிறது.

ஈ.வே. ராமசாமி நாயக்கரால் ஆரம்பிக்கப்பட்ட, ஈ.வே. ராமசாமி நாயக்கரை ஆசிரியராகக் கொண்ட குடியரசு இதழ் இறைவனைப் பற்றிக் கூறுகிறதென்றால் அதில் ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு உடன்பாடு உண்டு என்றுதானே அர்த்தம். மேலும் தலையங்கங்கள் தன்னால் எழுத்தப்பட்டது என்று ஈ.வே. ராமசாமி நாயக்கரே எழுதியிருக்கிறார். அப்படி இருக்கும்போது குடியரசில் எழுதப்பட்ட, தலையங்கத்தில் ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு உடன்பாடு உண்டு என்றுதானே பொருள்!

இந்த ஆதாரங்கள் கூட போதாது என்பவர்களுக்கு மேலும் சில ஆதாரங்கள் இதோ!

அதற்குமுன், வீரமணியின் பொய்!

வீரமணியிடம், 'பெரியார் பிறவி நாத்திகரா? அல்லது (பின்தாங்கிய) வயது வந்தபின் நாத்திகரா?' என்று கேள்வி கேட்டதற்கு, வீரமணி, ''அய்யாவின் கூற்றுப்படி அவர்களுக்குத் தெரிந்த காலம் முதல் கடவுள் நம்பிக்கை இருந்ததாகத் தெரியவில்லை என்றாலும் குடியரசின் துவக்க கால இதழ்களில் கடவுள் பற்றி சில தலையங்கங்களிலும் குறிப்பிடப்பட்டிருக்கிறது என்பதாலோ அவர் பிறகு நாத்திகரானார் என்று குறிப்பிட முடியாது. அப்போது உடன் இருந்தவர்கள் எழுதவும் ஒருவேளை அனுமதித்திருக்கக்கூடும்'' என்று கூறுகிறார். (நூல்:- வீரமணியின் பதில்கள்)

வீரமணி சொல்வதுபோல வைத்துக் கொண்டாலும் நாத்திகப் பத்திரிக்கையில் ஆத்திகக் கருத்துக்களை ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஏன் அனுமதித்தார்? ஈ.வே. ராமசாமி நாயக்கர் அப்போது அனுமதித்தார் என்றால் அவர் வழிப்படி நடக்கும் தாங்கள் உண்மை இதழிலும் விடுதலை நாளேட்டிலும் கடவுளை வேண்டுகிற, கடவுளை நம்புகிற கட்டுரைகளை எழுத அனுமதிப்பீர்களா?

ஆனால் வீரமணி சொல்கின்ற மாதிரி உண்மை அதுவல்ல. ஈ.வே. ராமசாமி நாயக்கர் தன்னுடைய 46 வயது வரை கடவுளை நம்பினார். அதை மறைக்க ஈ.வே. ராமசாமி நாயக்கரும், வீரமணியும் பொய் சொல்கிறார்கள். ஈ.வே. ராமசாமி நாயக்கரும் அவருடைய சீடர் வீரமணியும் பொய் சொல்வதில் வல்லவர்கள். இருப்பினும் உண்மையை யாராலும் மறைக்க முடியாது என்பதை இவர்களுக்கு நாம் எடுத்துக்காட்டுவோம். இதோ! அதே முதல் குடியரசில் ஈ.வே. ராமசாமி நாயக்கரே பத்திரிகாலய திறப்பு விழாவில் பேசிய பேச்சு வெளியிடப்பட்டிருக்கிறது.

அதில்,

''ஸ்ரீமான் ஈ.வே. ராமசாமி நாயக்கர் அவர்கள் ஸ்ரீலஸ்ரீ சுவாமிகளைப் பத்திரிகாலயத்தைத் திறந்து வைக்கும்படி கேட்டுக்கொண்டபோது கீழ்க்கண்டவாறு பேசினார்'' என்று குறிப்பு எழுதி அதன் கீழ் ஈ.வே. ராமசாமி நாயக்கர் பேசிய பேச்சு அச்சிடப்பட்டு இருக்கிறது.

மேலும் அதில்,

‘‘இப்பத்திரிகாலயத்தை திறப்பதற்கு ஈசன் அருளால் ஸ்ரீசுவாமிகள் போன்ற பெரியார் கிடைத்தது அரிதேயாகும். இறைவன் அருளாலும், சுவாமிகளது அருளாலும் பத்திரிகை என்றும் நிலைபெற்று மற்ற பத்திரிகைகளிடமுள்ள குறையாதுமின்றி செவ்வனே நடைபெற வேண்டுமாய் ஆசீர்வதிக்கும்படி சுவாமிகளை வேண்டுகிறேன்’’ என்று ஈ.வே. ராமசாமி நாயக்கர் பேசியிருக்கிறார்.

இதன்மூலம் நமக்கு தெரிவதென்ன? ஈ.வே. ராமசாமி நாயக்கர் கடவுள் மீது 46 வயது வரை நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதுதானே! மேலும் சில ஆதாரங்கள் இதோ!

பேராசிரியர் ந.க. மங்கள முருகேசன் என்பவர் ‘சுயமரியாதை இயக்கம்’ என்ற நூலை எழுதியுள்ளார். இந்த நூலுக்கு மு. கருணாநிதி அணிந்துரையும், க. அன்பழகன் வாழ்த்துரையும், தி.க. பொதுச்செயலாளர் கி. வீரமணி பாராட்டுகளையும் வழங்கியுள்ளனர். இப்படிப்பட்ட இந்நூலில் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கடவுள் நம்பிக்கையைப் பற்றி வருபவற்றைப் பார்ப்போம்.

* வ. வே. சு. அய்யர் மறைவு குறித்து குடியரசில் பெரியார் எழுதுகையில் ‘‘அவரது ஒரே புதல்வன் நிலை கண்டு எமதுள்ளம் நடுக்கமெய்துகிறது; எல்லாம் ஆண்டவன் செயல்’’ என்று எழுதினார்.

(குடியரசு 07-06-1925)

* காந்தியடிகள் உண்ணா நோன்பு இருந்தபோது ‘‘தப்பிதம் செய்த மக்களை தண்டித்தல் தவறு என உணர்ந்து அவர்களைப்

பரிசுத்தப்படுத்த மகாத்மா உண்ணாவிரதம் மேற்கொண்டதை நினைக்க, அவருடைய அரிய மேன்மை மலை மேலேற்றிய தீபம் போல் ஜொலிக்கிறது. அஹிம்சையின் தத்துவமும் விளங்குகிறது. உண்ணாவிரதத்தின் போது அவருக்கு போதிய வலிமை அளித்த கடவுளுக்கு எமது வணக்கம்'' என்று பெரியார் எழுதினார்.

(குடியரசு 06-12-1925)

* சித்தரஞ்சன் தாசின் புதல்வர் மறைவு குறித்து எழுதுகையில் ''சென்ற ஆண்டில் விண்ணவர்க்கு விருந்தினராய்ச் சென்ற தேசபந்து சித்தரஞ்சன் தாசின் அருமையான ஏகபுதல்வன் கடந்த ஜீன் மாதம் 26-தேதி இறைவன் திருவடியெய்தினார் என அறிய நாம் பெரிதும் வருந்துகின்றோம்'' என்று எழுதினார்.

(குடியரசு 04-07-1926)

மேற்கண்ட ஆதாரங்களை வைத்துப் பார்க்கும் போது ஈ.வே. ராமசாமி நாயக்கர் கடவுள் நம்பிக்கையில் ஊறித் திளைத்திருக்கிறார் என்பது வெள்ளிடைமலையெனத் தெற்றென விளங்கும். மேலும் ஈ.வே. ராமசாமி நாயக்கர், ஆத்திகர்கள் எவ்வாறு ஒரு நற்காரியத்திற்கு ஆன்மிகப் பெரியவர்களை அழைப்பார்களோ அதேபோல் தனது குடியரசு பத்திரிகாலயத்தை தொடங்கிவைத்திட ஸ்ரீலஸ்ரீ திருப்பாதிரிப் புலியூர் ஞானியர் சுவாமிகள் என்னும் சமய ஞானியையே அழைத்தார் என்பதிலிருந்தும் அவரது கடவுள் நம்பிக்கையை அறியலாம். ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு கடவுள் நம்பிக்கை இல்லாதிருந்தால் வேறு தலைவர்களை அழைத்திருப்பார். அவருக்கு கடவுள் நம்பிக்கை இருந்த காரணத்தால்தான் சமய ஞானியை அழைத்தார்

என்பதை யாராலும் மறுக்க முடியாது என்பது அவரது குடியரசு தலையங்கத்திலிருந்து நாம் அறியலாம்.

இதிலிருந்து என்ன தெரிகிறது?

ஈ.வே. ராமசாமி நாயக்கர் கடவுளை நம்பியிருக்கிறார். அதாவது தன் வாழ்நாளின் மொத்த வயதில் பாதி வயது வரை (46 வயது வரை) கடவுள் நம்பிக்கையில் கழித்திருக்கிறார்.

ஆனால் ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொல்வது என்ன? 'யோசித்து யோசித்துப் பார்க்கிறேன். கண்டுபிடிக்கவே முடியவில்லை' என்று சொல்கிறார். யோசித்து ஏன் பார்க்க வேண்டும்? 02-05-1925-ஆம் ஆண்டு குடியரசு இதழைப் பார்த்தாலே போதுமே! அந்த குடியரசு இதழ் காணாமல் போய்விட்டது அல்லது கண்டுபிடிக்க முடியவில்லை என்றுகூட இவர்கள் பொய் சொல்வார்கள். ஆனால் அந்த முதல் குடியரசு இதழ் என்ன ஐந்தாயிரம் வருடத்திற்கு முந்தைய இதழா? அல்லது புனல்வாதம் செய்து ஆற்றில் விட்டுவிட்டாரா? அல்லது அனல்வாதம் செய்து நெருப்பில் போட்டுவிட்டாரா?

ஈ.வே. ராமசாமி நாயக்கர் 'நவமணி' இதழில் கடவுள் நம்பிக்கை சிறுவயது முதல் இல்லை என்று எழுதியது. 1937-ல். முதல் குடியரசு வெளிவந்தது 1925. அதாவது முதல் குடியரசு இதழ் வெளிவந்து 12 வருடங்கள்தான் ஆகிறது. இந்த 12 வருடங்களுக்குள் தன்னுடைய 46 வயது வரை கொண்டிருந்த கடவுள் நம்பிக்கையை மறுத்து சிறுவயது முதல் கடவுள் நம்பிக்கை கொண்டிருக்கவில்லை என்று சொல்வது கடைந்தெடுத்த பொய் அல்லவா? ஹிந்து மதத்தின் பழமையான

நூல்களை தேடித்தேடி ஆராய்ந்து இந்த நூலில் இப்படியிருக்கிறது, அந்த நூலில் அப்படியிருக்கிறது என்ற சொல்லத் தெரிந்த ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு, தான் வெளியிட்ட முதல் குடியரசு இதழை கண்டுபிடித்து எனக்குக் கடவுள் நம்பிக்கை இருந்தது என்று உண்மையைச் சொல்ல துணிவு இல்லையே! இதுதான் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடா?

கண்டுபிடிப்பது கூட கடினமாக இருந்திருக்கலாம். ஞாபகம் கூடவா ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கு இருந்திருக்காது? தனது 46 வயது வரை நம்பியிருந்த கடவுள் பற்றை 12 வருடத்திற்குள்ளாக ஈ.வே. ராமசாமி நாயக்கர் மறந்திருப்பார் என்று கூறுவது அதைவிடப் பொய்யாகும். தன்னுடைய கடவுள் நம்பிக்கையை ஈ.வே. ராமசாமி நாயக்கர் மறைத்து போலி விளம்பரத்திற்காகப் பொய் சொல்லியிருக்கிறார் என்பதுதான் உண்மை.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஏன் 46 வயது வரை கொண்டிருந்த கடவுள் நம்பிக்கையை மறைத்துப் பொய் சொல்ல வேண்டும்?

எல்லாம் விளம்பரமோகம்தான்.

1937-ல் ஈ.வே. ராமசாமி நாயக்கரை பழுத்த நாத்திகவாதி என்று மக்கள் நம்பத்தொடங்கினர். அவரை பகுத்தறிவு பகலவனாக மக்கள் ஏற்கத் தொடங்கினர். அப்போது போய் நான் 46 வயது வரை கடவுளை நம்பினேன். பிறகு விட்டுவிட்டேன் என்று மக்களிடம் சொன்னால் தன்னை எங்கே பழுத்த நாத்திகவாதியாக – பகுத்தறிவு பகலவனாக ஏற்றுக் கொண்டு மரியாதை தரமாட்டார்களோ என்று ஈ.வே. ராமசாமி நாயக்கர் நினைத்தார். அதனால்தான் ஈ.வே. ராமசாமி நாயக்கர் சிறுவயது முதல் கடவுள்

நம்பிக்கை இல்லை என்று தன்னை அடையாளப்படுத்திக் கொள்ளப் பொய் சொன்னார். விளம்பரமோகம் யாரை விட்டது?ஆனால் தன்னுடைய கடந்தகால வாழ்க்கையை மறைத்துப் பொய் சொல்லி திரியும் நடிகர்-நடிகைகளுக்கும், அவர்களைப் போலவே பொய் சொல்லி திரியும் ஈ.வே. ராமசாமி நாயக்கருக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது என்பதுதான் நம் மனதில் எழுத் கேள்வி! இப்படிப் பொய் சொல்பவர்தான் பெரியாரா என்றக் கேள்வியைத்தான் கேட்கத் தோன்றுகிறதல்லவா?

தலைவரே பொய் சொல்லும்போது அவருடைய அடியார்கள் பொய் சொல்லாதவர்களாக இருப்பார்களா? அதனால்தான் வீரமணியும் இந்த விஷயத்தில் உண்மையை மறைத்துப் பொய் சொல்லியிருக்கிறார். ஈ.வே. ராமசாமி நாயக்கர் எழுதிய குடியரசு இதழை வைத்துத்தான் இப்போது வீரமணியிடம் கேள்வி கேட்கிறோம்.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் 46 வயது வரை கடவுள் நம்பிக்கை கொண்டிருந்தாரா? இல்லையா? இதை திராவிடர் கழகம் தெளிவுபடுத்தட்டும். அதன்பிறகு ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடு எத்தன்மை வாய்ந்தது என்பதை பரிசீலிப்போம். அதுவரை ஈ.வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடு என்பது பொய் சொல்வதிலே அடங்கியிருக்கிறது என்று சொல்வதில் என்ன தவறு இருக்கமுடியும்?

குறிப்பு:

ஈ.வே. ராவின் தலைமையில் நடந்த நிகழ்ச்சி

1971-ம் ஆண்டு ஜனவரி மாதம் 6-ம் தேதி தினமணி நாளிதழில் வந்த செய்தி:

நாத்திக மாநாடு; முகூர்த்தக்கால் நடப்பட்டது! மஞ்சள், குங்குமம் மாவிலைக் கொத்துடன் – என்ற தலைப்பில் இருந்த செய்தியில் சேலம் போஸ் மைதானத்தில் 1971-ல் ஜனவரி 16,17-ம் தேதிகளில் ‘பகுத்தறிவாளர்கள் மாநாடு’ ஒன்று நடத்தப்பட உள்ளது. இம்மாநாட்டிற்கு ஈ.வே. ராமசாமி நாயக்கர் தலைமை தாங்க உள்ளார். அதற்காக ஒரு பெரிய பந்தலும் போடப்பட்டுள்ளது. இந்தப் பந்தல் போடுவதற்கு முன்பாக ‘மாவிலை, வேப்பிலை’ கட்டப்பட்ட முகூர்த்தக்கால் நடப்பட்டு மஞ்சள் குங்குமமும் பூசப்பட்டது. அவ்வழியே சென்ற மக்கள் இதனைக் கண்டு வியப்படைந்தனர். (நன்றி: விஜய பாரதம் 10-02-2002)

## **பெரியாரின் மறுபக்கம் – பாகம் 7 (பெரியாரின் போலி கடவுள் மறுப்புக் கொள்கை)**

இந்து மதத்தை கண்டிக்கும் ஈ.வே. ராமசாமி நாயக்கர் முஸ்லிம், கிறிஸ்தவ மதங்களை கண்டிப்பதில்லையே ஏன் என்று இந்துக்கள் கேட்டால், அதற்கு ஈ.வே. ராமசாமி நாயக்கரின் வாரிசுகள் சொல்வது என்ன தெரியுமா?

“கடவுள் இல்லை; கடவுள் இல்லை; கடவுள் இல்லை

கடவுளை கற்பித்தவன் முட்டாள்

கடவுளை பரப்பியவன் அயோக்கியன்

கடவுளை வணங்குகிறவன் காட்டுமிராண்டி”

என்றுதான் ஈ.வே. ராமசாமி நாயக்கர் சொன்னாரே தவிர இந்துக் கடவுள்களை மட்டும் சொல்லவில்லை. இதில் வரும் ‘கடவுள்’ என்ற சொல் கிறிஸ்தவ, முஸ்லிம் கடவுள்களையும் குறிக்கும் என்று கூறுகின்றார்கள்.

jesusஆனால் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் இந்த வாசகம் இந்து மதத்திற்கு மட்டும்தான் என்பதை இவர்கள் மூடி மறைக்கிறார்கள். ஈ.வே. ராமசாமி நாயக்கர் கடவுள் மறுப்பு

வாதத்தை இந்து மதத்திற்கு மட்டும்தான் சொன்னாரே தவிர கிறிஸ்த, முஸ்லிம் மத கடவுள்களுக்காக அல்ல. கிறிஸ்துவ, முஸ்லிம் மதத்தை ஈ.வே. ராமசாமி நாயக்கர் எப்போதும் பாராட்டியே வந்திருக்கிறார். அந்த மதங்களைப் பற்றிய ஈ.வே. ராமசாமி நாயக்கரின் விமர்சனம் மிக மிக மிக சொற்பமே. அந்த சொற்ப விமர்சனமும்கூட அந்த மதத்தைக் கண்டிக்கும் விதமாக இல்லாமல் அறிவுரை கூறும் விதமாகவே இருக்கும். ஆனால் இந்து மதத்தை விமர்சனம் செய்யும்போது அறிவுரை கூறும் விதமாக இல்லாமல் கண்டிக்கும் விதமாக இருக்கும்.

கடவுள் மறுப்பு என்று வரும்போது கிறிஸ்துவ, முஸ்லிம் கடவுள்களுக்கு விதிவிலக்கு அளிப்பது ஈ.வே. ராமசாமி நாயக்கரின் போலி கடவுள் மறுப்பு கொள்கையைத்தானே காட்டுகிறது! ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கடவுள் மறுப்புக் கொள்கை போலியானது என்பதற்கு இதோ ஆதாரங்கள்:-

16-11-1930 ஆம் ஆண்டு ‘குடியரசு’ இதழில் கேள்வி-பதில் வடிவில் ஈ.வே. ராமசாமி நாயக்கர் எழுதுகிறார்:-

வினா: கிருஸ்தவனாகப் போவதில் என்ன கெடுதி?

விடை: ஒரு கெடுதியும் இல்லை. ஆனால், மதத்தின் பேரால் குடிக்க வேண்டாம்.

வினா: மகமதியனாவதில் என்ன கெடுதி?

விடை: ஒரு கெடுதியும் இல்லை. ஆனால் பெண்களுக்கு மூடி போடாதே.

வினா: கிருஸ்தவ மதத்தில் சில ஆபாசக் கொள்கைகள் இருந்தும் அவர்கள் எப்படி உலகை ஆளுகிறார்கள்?

விடை: கிருஸ்தவ மதத்தில் எவ்வளவு ஆபாசமும் முட்டாள் தனமுமான கொள்கைகளும் இருந்தபோதிலும் அதைப்பற்றி நமக்கு கவலை இல்லை. ஏனெனில் அவர்கள் பெரும்பாலும் பகுத்தறிவுக்கு மதிப்பு கொடுப்பவர்களாகிவிட்டார்கள். அவர்கள் வாழ்க்கைக்கோ, மன உணர்ச்சிக்கோ சிறிதும்

மதத்தை லட்சியம் செய்வதில்லை. அதனால் அவர்கள் மதத்தைப் பற்றி நாம் பேசுவது பயனற்றதும் முட்டாள்தனமும் ஆகும்.

25-08-1929 -’குடியரசு’ இதழில் எழுதுகிறார்:-

“இன்று நாம் கொண்டாடும் திரு. மகமது நபி அவர்களின் பிறந்த நாள் கொண்டாட்டமானது நான் முன் சொன்ன முறையில் கொண்டாடத்தக்க ஒரு ஒப்பற்ற பெரியாரின் கொண்டாட்டம் என்றே சொல்லுவேன். இன்னமும் விளக்கமாகச் சொல்வதானால், இப்போது நம்மால் மதத்தலைவர்கள் என்று சொல்லப்படும் பெரியார்களில் எல்லாம் திரு. மகமது நபி அவர்கள் மேலானவர்கள் என்றும், எல்லா மக்களும் பொதுவாகப் பெரிதும் அவரைப் பின்பற்ற உரியார் என்றும் கூட தைரியமாகச் சொல்லுவேன்”.

23-08-1931 ‘குடியரசு’ இதழில் கூறுகிறார்:-

புத்தர், கிறிஸ்த்து, மகமது நபி ஆகியோர்கள் சீர்திருத்தகாரர்களாயத் தோன்றினார்கள்... மதங்கள் ஒழிந்த பிறகு தான் உலக சமாதானமும், ஒற்றுமையும், சாந்தியும் ஏற்பட

முடியும் என்பது அநேக அறிஞர்களது அபிப்பிராயமானாலும் அதற்கு விரோதமாக ஏதாவது ஒரு மதம் இருக்கும்போது உலக சமாதானம் ஏற்பட்டுவிட்டது. சாந்தி ஏற்பட்டுவிட்டது என்று சொல்லப்படுமானால் அது இஸ்லாம் கொள்கைகளாகத் தான் இருக்கக்கூடும் என்று கருதுகின்றேன்.

21-02-1935 'குடியரசில்' எழுதுகிறார்:-

"தமிழ் மக்களுக்கு இஸ்லாம் மதமே பொருத்தமானது.

... பண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணப்படுகின்றப் படிப்பார்ப்போமானால் தமிழ் மக்களின் அப்போதிருந்த வாழ்க்கையும், மதமும், கடவுள் வழிபாடும் ஆகியவை எல்லாம் பெரிதும் இஸ்லாம் மதத்தையும், ஒரு சில கொள்கை மட்டும் கிறிஸ்துவ மதத்தையும் ஒத்து இருக்கின்றன என்று சொல்லலாம்."

26-06-1943 'விடுதலை'யில் எழுதுகிறார்:-

"இந்து மதத்தைத்தான் மானமுள்ள ஆதிதிராவிடனும், தமிழனும் வெறுத்து

அதிலிருந்து விலக வேண்டுமே ஒழிய, அதைவிட்டு இஸ்லாம் மதத்தைப் பற்றியோ, வேறுமதத்தைப் பற்றியோ வெறுத்துப் பேசுவது மதியற்றதும், மான உணர்ச்சியற்றதுமாகும்.''

26-12-1948 'விடுதலை'யில் எழுதுகிறார்:-

அறிவான தெய்வமே (ராமலிங்கம்) அன்பான தெய்வமே (கிறிஸ்து) அருளான தெய்வம் (மகமதுநபி) சத்யமான தெய்வமே (காந்தி).

31-12-1948 'குடியரசில்' எழுதுகிறார்:-

''... ஆனால் கிருஸ்துவையோ, மகமது நபியையோ இம்மாதிரி காண முடிவதில்லை ஏன்? அவர்களெல்லாம் லட்சிய புருஷர்களாக ஒழுக்கத்தின் முதல்வர்களாக சிருஷ்டிக்கப்பட்டவர்கள்''

04-06-1959 'விடுதலையில்' எழுதுகிறார்:-

**"கடவுளை** கும்பிட வேண்டாம் என்று கூறவில்லை. ஏதாவது ஒரு கடவுளை கிறிஸ்தவன், முஸ்லிம்கள் மாதிரி கும்பீடு''

25-12-1958 'விடுதலை'யில் எழுதுகிறார்:-

“கிறிஸ்தவர், முகமதியர்களை, உங்கள் கடவுள் எப்படியிருக்கிறார் என்று கேட்டால், யோக்கியமான கடவுள் என்கிறார்கள். அதற்கு உருவம் கிடையாது என்று சொல்லுகிறான். ஒழுக்கமே உருவானவர், கருணையை உடையவர், அவருக்கு ஒன்றும் தேவையில்லை என்று வேறு சொல்லுகிறான். ஏன் அப்படிப்பட்ட கடவுள் உங்களுக்கு இருக்கக்கூடாது என்று கேட்கிறேன்?”

இந்த ஆதாரங்கள் ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கடவுள் மறுப்புக் கொள்கை போலியானவை என்பதைத்தானே காட்டுகிறது! கடவுளே இல்லை என்று சொல்கின்ற ஈ.வே. ராமசாமி நாயக்கர் அன்பான தெய்வமே கிறிஸ்து என்று சொல்லுகிறார் என்றால் அது போலி கடவுள் மறுப்புக் கொள்கையைத் தானே காட்டுகிறது! ஆக, ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கடவுள் மறுப்புக் கொள்கை இந்து மதத்திற்கு மட்டும்தான். அதுவும் போலி கடவுள் மறுப்புக் கொள்கைத்தான்.

இதிலே மற்றொன்றையும் கவனிக்க வேண்டும். கடவுள் இல்லை என்று சொன்ன ஈ.வே.

ராமசாமி நாயக்கர் அதற்கு முரணாக பல இடங்களில் பேசியிருக்கிறார்; எழுதியும் இருக்கிறார்.

“நாங்கள் கடவுள் இல்லையென்று சொல்லுபவர்கள் அல்ல; கடவுளை நம்பவேண்டாம் என்று சொல்லவும் இல்லை... அன்பான கடவுள், கருணையுள்ள கடவுள், ஒழுக்கமுள்ள கடவுள் நான் வேண்டாமென்று சொல்லவில்லை”

(விடுதலை 10-09-1956)

“கடவுளைக் கும்பிடவேண்டாம் என்று கூறவில்லை. கடவுள் இல்லை என்று சொல்லவரவில்லை. யோக்கியமான ஒரு கடவுளை கும்பிடுங்கள், வேண்டாம் என்று கூறவில்லை.”

(விடுதலை 04-06-1959)

கடவுளைக் கும்பிட வேண்டாம் என்று கூறவில்லை. ஏதாவது ஒரு கடவுளை கிறிஸ்தவன், முஸ்லிம் மாதிரி கும்பீடு”

(விடுதலை 04-05-1959)

இது போன்ற முரண்பட்ட கருத்துக்களை பல தடவை ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறியிருக்கிறார். கடவுள் இல்லவே இல்லை; கடவுளை வணங்குகிறவன் காட்டுமிராண்டி என்றெல்லாம் பேசிய ஈ.வே. ராமசாமி நாயக்கர், ஒரே கடவுளை கும்விடு; கடவுளை கும்பிட வேண்டாம் என்று கூறவில்லை என்று பல்டி அடித்து முரண்பட்டவாதமல்லவா?-இப்படி நாம் கூறும் போது இதற்கு பதிலாக பகுத்தறிவுவாதிகள் என்ன கூறுகிறார்கள் தெரியுமா?

ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஒரே ஒரு கடவுளை கும்பிடு என்று சொன்னது “கடவுள் வேண்டும் என்று சொல்லுகின்ற, கடவுளை விடமுடியாதவர்களுக்குத்தான்” என்று பகுத்தறிவுவாதிகள் கூறுகின்றனர்.

ஆனால் இந்த பதில்கூட பலமில்லாததுதான். ஏனென்றால் கடவுள் நம்பிக்கை உள்ளவர்கள் நாத்திகர்களாக்குவதுதானே ஈ.வே. ராமசாமி நாயக்கரின் வேலை. அதைத்தானே அவர் செய்து வந்தது. அதாவது ஈ.வே. ராமசாமி நாயக்கரின் கருத்துப்படி சாதியை ஒழிக்க

வேண்டுமானால் பிராமணர்களை ஒழிக்கவேண்டும். பிராமணர்களை ஒழிக்க வேண்டுமானால் மதத்தை ஒழிக்க வேண்டும். மதத்தை ஒழிக்கவேண்டுமானால் கடவுளை ஒழிக்க வேண்டும். இப்படி கடவுளை ஒழித்தால்தான் எல்லாவற்றையும் ஒழிக்க முடியும் என்று சொல்கின்றபோது சிலருக்கு மட்டும் கடவுளை கும்பிடு என்று சொன்னால் அது தான் பகுத்தறிவா? அதுதான் கடவுள் மறுப்புக் கொள்கையா? இது முரண்பட்டவாதம்தானே!

கடவுள் வேண்டும் என்று சொல்கின்ற-கடவுளை விடமுடியாதவர்களுக்குத்தான் என்பது சரி என்றால் சாதி வேண்டும் என்று சொல்லுகின்ற-சாதியை விடமுடியாதவர்களுக்கு சாதியை கடைபிடியுங்கள் என்று கூறுவீர்களா? சாதியைவிட்டுவிட வேண்டும் என்று சொல்கின்றபோது சாதியை விடமுடியாதவர்களுக்கு மட்டும் சாதியை கடைபிடியுங்கள் என்று சொன்னால் அது எவ்வளவு மூடத்தனமோ அதேபோலத்தான்

கடவுள் இல்லை என்று சொல்கின்றபோது கடவுளை விடமுடியாதவர்களுக்கு மட்டும் கடவுளை கும்பிடுங்கள் என்று சொன்னால் அதுவும் பகுத்தறிவற்ற மூடத்தனம் ஆகும். ஆனால் இப்படி பகுத்தறிவற்ற முறையில் பேசிய ஈ.வே. ராமசாமி நாயக்கரைத் தானே பகுத்தறிவு பகலவன் என்று சொல்லுகின்றார்கள் பகுத்தறிவுவாதிகள்!

- தொடரும். 8

***பெரியாரின் மறுபக்கம் – பாகம் 8 (நான் இந்துவாய் சாகமாட்டேன் – பெரியாரின் முரண்பாடு)***

சொல்வது ஒன்று-செய்வது ஒன்று என்ற கட்டத்திற்கு அய்யா (ஈ.வே. ராமசாமி நாயக்கர்) அவர்கள் போகவில்லை என்று வீரமணி சொல்கின்றாரே-அது உண்மையில்லை. சொல்வது ஒன்று செய்வது ஒன்று என்ற கட்டத்திற்கு பல தடவை போயிருக்கிறார் ஈ.வே. ராமசாமி நாயக்கர் என்பதற்கு இதோ ஓர் ஆதாரம்:-

முஸ்லிமாகச் சாவேன்: ஈ.வே. ரா அறிக்கை!

ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறுகிறார்:-

“நான் சாவதற்கு சில நிமிடமிருக்கும் வரையிலும் இந்த ஜாதி, மத, புராணப் புரட்டுகளை ஒழிக்கப் போராடி சாகுந்தருணத்தில் முஸ்லிமாகத்தான் சாவேன். ஏனென்றால் நான் செத்த பிறகு என் சொத்துக்களை, என்னை மோட்சத்திற்கு அனுப்புவதான புரட்டுகளால் என் சந்ததியாரை ஏமாற்றிப் பறிக்கப்படாமலும், அவர்கள் மூடநம்பிக்கையிலீடுபடாமலிருக்கச் செய்யவும்தான் நான் அவ்வாறு செய்யத் தீர்மானித்திருக்கின்றேன். நான் செத்தபிறகு என் சந்ததியார் என்னை மோட்சத்திற்கனுப்பப்படுமென்ற மூடநம்பிக்கையினால் பார்ப்பனர் காலைக்கழுவி சாக்கடைத் தண்ணீரை குடிக்காமலிருக்க செய்ய வேண்டுமென்பதற்காகவும்தான் நான் முஸ்லிமாகச் சாவேன் என்கிறேன்.

(திராவிடன் 05-08-1929)

இதையும் ஈ.வே. ராமசாமி நாயக்கரே கூறுகிறார்:-

தோழர் ஈ.வே. ராமசாமி அவர்கள் தீண்டப்படாத வகுப்பு என்பதைச் சார்ந்தவர் அல்ல என்று சொல்லப்படுவரானாலும் தான் சாகும்போது இந்துவாய்ச் சாகப்போவதில்லை என்று சுமார் பத்து வருடத்திற்கு முன்பே சொல்லியிருக்கிறார்.

(குடியரசு 20-10-1935)

அம்பேத்கருக்கு அறிவுரை கூறிய ஈ.வே. ரா!

தான் இறக்கும்போது இந்துவாய் சாகமாட்டேன் என்று கூறிய ஈ.வே. ராமசாமி நாயக்கர், டாக்டர் அம்பேத்கருக்கு அறிவுரை கூறுகிறார். அதாவது, “அம்பேத்கர் தாம் இறக்கும்போது இந்துவாக இறக்கமாட்டேன். வேறு மதத்துக்கு மாற உள்ளேன்” என்று கூறியதை எடுத்துக்காட்டி ஈ.வே. ராமசாமி நாயக்கர், “இதை பாராட்டும்போது நாம் சொல்வதெல்லாம்-அம்பேத்கர் அவர்கள் பார்ப்பன சூழ்ச்சிக்கு ஏமாந்து மறுபடியும் இத்தீர்மானத்தை மாற்றிக் கொள்ளக்கூடாது

என்பதோடு வைதீகரும் மூடநம்பிக்கையும், குருட்டு பழக்கவழக்கமும் கொண்ட வேறு எந்த மதத்திலும் விழுந்துவிடக்கூடாது என்று எச்சரிக்கை செய்கிறோம்'' என்று கூறுகிறார்.

(குடியரசு 20-12-1935)

மேலும் ஈ.வே. ராமசாமி நாயக்கர் “1926-ல் நான் இந்துவாய் இறக்கப்போவதில்லை என்று கூட்டத்தில சபதம் செய்து தருகிறேன்'' என்று நினைவூட்டுகிறார்.

(குடியரசு 31-05-1936)

ஆக, ஈ.வே. ராமசாமி நாயக்கர் இறக்கும்போது இந்துவாக இறக்கக்கூடாது என்பதிலே உறுதியாக இருந்தார் என்பது தெளிவாகின்றது. ஆனால் இவ்வளவு உறுதியாக, சபதம் ஏற்றிருந்த ஈ.வே. ராமசாமி நாயக்கர் ஏன் தனது கடைசி காலத்தில் மதம் மாறாமல் இந்துவாகவே இறந்தார்?

இதில் ஒரு வேடிக்கை என்ன தெரியமா?

அம்பேத்கருக்கு அறிவுரை கூறியதுதான்.

அதாவது அம்பேத்கர் கொண்டுவந்த தீர்மானத்தை மாற்றிக் கொள்ளக்கூடாது என்று சொன்னதுதான். ஆனால் அம்பேத்கர் தான் இந்துவாக இறக்கப்போவதில்லை என்று சொன்னவாறே பௌத்தத்தை தழுவி, தான் சொன்ன சொல்லை செயலில் காட்டினார். ஆனால் அம்பேத்கருக்கு அறிவுரை சொன்ன ஈ.வே. ராமசாமி நாயக்கர் அதை காற்றிலே பறக்கவிட்டுவிட்டார். உண்மையிலேயே ஈ.வே. ராமசாமி நாயக்கருக்குத்தான் அம்பேத்கர் அறிவுரை சொல்லியிருக்க வேண்டும். இவர், தான் சொல்வது ஒன்று-செய்வது ஒன்று என்ற கட்டத்திற்குப் போகாதவராம்!

இதில் மற்றொரு வேடிக்கை என்ன தெரியுமா?

அம்பேத்கருக்கு, வைதீகமும், மூடநம்பிக்கையும், குருட்டு பழக்க வழக்கமும் கொண்ட வேறு எந்த மதத்திலும் விழுந்துவிடக்கூடாது என்று எச்சரித்த ஈ.வே. ராமசாமி நாயக்கர், மூடநம்பிக்கையும், குருட்டு பழக்கவழக்கமும் கொண்ட இஸ்லாமுக்கு மாறுவதே சரியான அரசியாலாக இருக்கும்

என்று அம்பேத்கர் பவுத்த மதத்தை தழுவியபோது சொன்னதுதான்!

சொல் ஒன்று-செயல் ஒன்று என்ற கட்டத்திற்கே அய்யா போகவில்லை என்று வீரமணி சொல்கின்றாரே-அப்படியானால் இந்துவாக இறக்கமாட்டேன் என்று சொன்ன கட்டத்திலிருந்து இந்துவாகவே இறந்தார் என்ற கட்டத்திற்கு சென்றது ஏன்? இதுதான் சொல்லும் செயலும் ஒன்று என்ற கட்டமா? இதை வீரமணிதான் விளக்கவேண்டும்.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் இந்துவாகத்தான் இறந்தார் என்று நாம் சொன்னால்-உடனே ஈ.வே. ராமசாமி நாயக்கர் இந்துமதத்தை எதிர்த்தவர். நாத்திகர்களுக்கு மதம் இல்லை. அவர் மதம் மாறவில்லையென்றாலும் அவரை இந்து என்று சொல்லிவிடமுடியாது. ஈ.வே. ராமசாமி நாயக்கர் நாத்திகவாதியாதலால் அவர் இறக்கும்போது நாத்திகவாதிதான். இந்து அல்ல என்று பகுத்தறிவுவாதிகள் சொல்லிவிடுவார்கள்.

அறிவுரையை மறந்த ஈ.வே. ரா!

ஆனால் ஈ.வே. ராமசாமி நாயக்கர் இந்துவாகத்தான் இறந்தார் என்பதற்கு ஈ.வே. ராமசாமி நாயக்கரே சாட்சியம் கொடுத்திருக்கிறார்.

ஈ.வே. ராமசாமி நாயக்கர் கூறுகிறார்:-

நான் அம்பேத்கர் அவர்களை சந்தித்தபோது அவர் என்னிடத்தில் ஒரு ஃபாரத்தை நீட்டிப்போடு கையெழுத்தை. நாம் இருவரும் புத்த நெறியில் சேருவோம் என்றார். அதற்கு நான் சொன்னேன் நீங்கள் சேருங்கள். நான் மாறாமல் இருந்து - இந்து என்பனவாகவே இருந்து-இந்து வண்டவாளங்களை எடுத்துப் பிரச்சாரம் செய்ய வசதியாக இருக்கும் என்று தெரிவித்தேன். நான் புத்த மார்க்கத்தில் சேர்ந்துவிட்டால், இப்போது கடவுள் உருவச்சிலைகளை உடைத்துக்கிளர்ச்சி செய்தது போல செய்ய முடியாததாகிவிடும் என்றேன்.

(விடுதலை 09-02-1950)

periyar_ambedkarஈ.வே. ராமசாமி நாயக்கர் சொல்வதிலிருந்து, ஈ.வே. ராமசாமி நாயக்கர்

இந்துவாகத்தான் இறந்தார். யாருக்கு ஈ.வே. ராமசாமி நாயக்கர் அறிவுரை கூறினாரோ, அவரே ஈ.வே. ராமசாமி நாயக்கரை அழைத்தபோது இந்துவாக இறக்கமாட்டேன் என்ற தன் சபதத்தை காற்றில் பறக்கவிட்டுவிட்டு இந்துவாகவே இருப்பேன் என்று சொன்னாரே ஏன்? அந்த ஈ.வே. ராமசாமி நாயக்கர்தான் சொல் ஒன்று செயல் ஒன்று என்ற கட்டத்திற்கு போகாதவரா?

***பெரியாரின் மறுபக்கம் – பாகம் 9 (பெரியார் திடல் கொள்கைக்காக அல்ல! பணத்திற்காக!)***

***பெரியார் திடல் வரலாறு!***

”இந்த பெரியார் திடல் மன்றத்திற்கு ஒரு வரலாறு உண்டு. ஒரு தடவை தந்தை

பெரியார் அவர்கள் செயிண்ட் மெமோரியல் ஹாலில் மாநாடு கூட்ட வேண்டுமென்று கேட்டபோது அய்யாவின் கொள்கையை கேட்டுவிட்டு அவர்கள் மறுத்துவிட்டார்கள். அப்படியானால் இங்கேயே ஒரு பொது மண்டபம் அமைப்போம் என்று இந்த மண்டபத்தை அமைத்தார்கள். அப்போது அங்கே இருக்கிற எல்லோரையும் அழைத்து தந்தை பெரியார் அவர்கள் சொன்னார்கள்:-

நாங்கள் கேட்டோம், மறுத்துவிட்டார்கள்- உடனே எனக்கு என்ன தோன்றிற்று? பொதுமண்டபம் ஒன்று சென்னையிலே இருக்க வேண்டும். அது எல்லோருக்கும் பயன்படவேண்டும். எனக்கு மாறுபட்ட கருத்து உடையவர்கள் கேட்டாலும் கொடுக்கவேண்டும், தைரியமாக.இன்னாருக்கத்தான் என்று இருக்கவேண்டிய அவசியமில்லை. ”பொது மண்டபம்” என்ற முறையிலே-நமக்கு அவர்கள் மறுத்ததற்கு நேர் எதிரிடையாக நீங்கள் நடக்க வேண்டும்…என்று சொன்ன காரணத்தினால்தான் இன்றைக்கு அய்யா அவர்கள் வகுத்த அந்த

நெறிப்படி இங்கே அனைவருக்கும் பொதுவுக்குப் பயன்படும்படி இந்த மண்டபம் அமைக்கப்படுகிறது'' என்று வீரமணி அவர்கள் 'சங்கராச்சாரி யார்' என்ற நூலிலே கூறுகிறார்.

மேலும் 31-03-1994 அன்று சன் டி.வி.யில் ரவி பெர்னாட் அவர்கள், ''பெரியார்திடலில் தீ மிதி நடத்த வேண்டும் என்றால் ஒத்துக்கொள்வீர்களா?'' என்று கேட்டதற்கு வீரமணி அவர்கள், "தாராளமாக ஒத்துக் கொள்வோம். அதற்கு அடுத்த நாள் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சியையும் நாங்கள் நடத்துவோம்" என்றும்

அதைத் தொடர்ந்த கேள்விக்கு "பெரியார் திடல் எங்களுடைய கட்சியினுடைய மன்றம் அல்ல" என்றும் பதில் கூறியுள்ளார்.

...வீரமணி சொல்கின்ற இந்த பெரியார் திடல் வரலாற்றை ஆராய்ந்தால் ஈ. வே. ராமசாமி நாயக்கர் எவ்வளவு முட்டாள்தனமான

காரியத்தை செய்திருக்கிறார் என்பது புலனாகும். மற்றொன்றையும் யோசிக்கும்போது ஈ. வே. ராமசாமி நாயக்கரே, மூடநம்பிக்கை வளர ஏற்படுத்தித்தந்த இடம்தான் பெரியார் திடல் என்பதையும் யாராலும் மறுக்கமுடியாது.

ஈ. வே. ராமசாமி நாயக்கருடைய இந்த வழி எப்படி தவறானது என்பதை இப்போது பார்க்கலாம்.

மெமோரியல் ஹால் என்ற கிறிஸ்தவர் இடம் கொடுக்கவில்லை என்றால் யாருக்கு நஷ்டம்? இடம் கொடுக்காதவர்களுக்குத்தானே நஷ்டம்! அந்த இடம் இல்லையென்றால் வேறு இடத்தில் நடத்தலாம் அல்லவா? அதைவிட்டுவிட்டு அவர் இடம் தரவில்லை. அதனால் பொது மன்றம் ஒன்றை ஆரம்பித்தேன் என்று ஈ. வே. ராமசாமி நாயக்கர் சொன்னது பகுத்தறிவின் செயலா? அதுவும் கொண்ட கொள்கைக்கு ஆபத்து ஏற்படுவதென்றால் அது வீண்வேலை தானே!

உதாரணமாக ஒன்றை நினைத்துப்பாருங்கள்.

ஈ. வே. ராமசாமி நாயக்கரின் பேட்டியை ஒரு பத்திரிகை அவர்களின் கொள்கைக்கு முரணாக இருப்பதால் வெளியிடவில்லை என்பதற்காக எல்லோருடைய கொள்கைகளையும் சொல்லும் பத்திரிகை ஒன்றை ஆரம்பிக்கிறேன் என்று வீரமணி சொல்வாரா?

இங்கே ஒன்றை நினைவுபடுத்த விரும்புகிறேன்.

veramani14.08.98 அன்று கோலாலம்பூரில் வீரமணி தன்னுடைய நிகழ்ச்சிக்கு இடம் கொடுக்காததைப் பற்றி பேசும் போது ”நண்பர்களே கீதையின் மறுபக்கம் நூலை அறிமுகப்படுத்த இங்கு இடம் தர மறுத்தால் இன்னொரு இடத்தில் அறிமுகம் செய்து வைத்துவிட்டுப் போகிறோம். புத்தகம்

பரவுவதில் எங்களுக்கொன்றும் எந்தச் சங்கடமும் இல்லை. இடம் கொடுத்தவர்களுக்கு ஒரு சங்கடத்தை உருவாக்கக்கூடாது என்ற உணர்வோடு நாங்கள் நடக்க வேண்டுமென்று விரும்புகிறோம். இதை ஒரு பெரிய குற்றமாகக் கூடக் கருதவேண்டிய அவசியமில்லை. ஆகா! இந்த இடத்தில் தான் பண்ணவேண்டும். அந்த இடத்தில்தான் பண்ணவேண்டும் என்ற அவசியமில்லை. நாங்கள் பகுத்தறிவுவாதிகள்" என்று கூறுகிறார்.

ஆனால் இப்படி பேசியிருக்கின்ற வீரமணி என்ன செய்திருக்க வேண்டும்? ஈ. வே. ராமசாமி நாயக்கரின் வழிப்படி, கொள்கைப்படி, கோலாலம்பூரில் ஒரு பொதுமன்றத்தைக் கட்டி எல்லோருக்கும் பொதுவாக வாடகைக்கு விட்டிருக்கவேண்டுமா? இல்லையா? அதையும் விட்டுவிட்டு ஈ. வே. ராமசாமி நாயக்கரின் வழியையும் விட்டுவிட்டு, இன்ன இடத்தில்தான் பண்ணவேண்டும் என்ற அவசியமில்லை. நாங்கள் பகுத்தறிவுவாதிகள் என்று கூறுகிறாரே, அப்படியென்றால் ஈ. வே.

ராமசாமி நாயக்கர் பகுத்தறிவுவாதி இல்லையா? ஒருவர் இடம் கொடுக்கவில்லை என்றால் மற்றொரு இடத்தில் நடத்திடவேண்டும். அவர்தான் பகுத்தறிவுவாதி என்று வீரமணியே சொல்கின்றபோது ஈ. வே. ராமசாமி நாயக்கர் செய்தது பகுத்தறிவின் செயல் அல்ல என்பது தெளிவாகின்றதே! வீரமணிக்கு இருந்த பகுத்தறிவு கூட ஈ. வே. ராமசாமி நாயக்கருக்கு இல்லையே!

இது ஒருபுறம் இருக்க,

பொதுமன்றம் ஆரம்பித்ததன் மூலம் இவர்களே இவர்கள் கொள்கைக்கு முரணாக நடந்துகொள்கிறார்கள். எப்படியென்றால் பெரியார் திடலில் அடிக்கடி அற்புத சுகமளிக்கும் தெய்வீக கூட்டங்கள் நடைபெறுகின்றன. காது கேட்காதவர்களுக்கு காத கேட்கவைப்பது, குருடர்களை பார்வையடையச் செய்வத போன்ற நிகழ்ச்சிகள் பக்தியின் பெயரால் நடைபெறுகிறது. இந்த

நிகழ்ச்சிக்கு சுமார் 500 பக்தர்களுக்கு மேல் வருகின்றார்கள். நிகழ்ச்சி நடக்கும்போது மேலும் அங்கே பக்தி ஊட்டப்படுகிறது. நிகழ்ச்சி முடிந்ததும் போய் விடுகிறார்கள். ஆனால் அடுத்த நாள் வீரமணி சொல்கின்றது போல, மூட நம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடத்தினால் அற்புத சுகமளிக்கும் கூட்டத்தில் கலந்துக்கொண்ட மக்கள் அல்லது பக்தர்கள் மறுநாள் நடக்கும் மூட நம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சியில் கலந்து கொள்வார்களா?

பெரியார் திடலில் தீமிதி விழா நடந்தால் சுமார் 500 பக்தர்களுக்கு மேல் வருவார்கள். ஆனால் அடுத்த நாள் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடந்தால் முதல் நாள் தீமிதி விழாவில் வந்தவர்கள் இதற்கு வருவார்களா? கண்டிப்பாக வரமாட்டார்கள். ஆகவே பெரியார் திடலை வாடகைக்கு கொடுப்பதன் மூலம் இவர்களே பக்தியை ஏற்படுத்துகிறார்கள் என்றுதானே அர்த்தம்! இதுதானா மக்களை பகுத்தறிவுவாதிகளாக மாற்றும் முறை?

பெரியார் திடலில் அடிக்கடி இயேசு ஜீவிக்கிறார் கூட்டங்கள் நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கின்றன. ஆனால் அடுத்த நாள் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடத்தப்பட்டதா? இல்லவே இல்லை! ஆதாரத்தோடு பகுத்தறிவுவாதிகள் இதை நிரூபிக்கமுடியுமா? அப்படி ஒருவேளை நடத்தப்பட்டிருந்தால் இயேசு ஜீவிக்கிறார் நிகழ்ச்சியில் கலந்து கொண்டவர்கள் எத்தனைபேர் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு இருக்கிறார்கள்?

எலியை வயலில் அனுமதித்துவிட்டு, வயல் பாழாகிறதே என்று அலறிவிட்டு பின்பு எலியை விரட்டுகிறேன் என்று சொல்வது எவ்வளவு முட்டாள்தனமோ-ஏமாற்றுத்தனமோ…

பாம்புக்கு பால் வைத்துவிட்டு ‘பாம்பு ஒழிப்பு’ நிகழ்ச்சி நடத்தினால் அது எவ்வளவு முட்டாள்தனமோ-ஏமாற்றுத்தனமோ…

திரைப்படம் எடுப்பதற்கு பணம் தந்துவிட்டு ”திரைப்படம் ஒழிப்பு” போராட்டம் நடத்தினால் அது எவ்வளவு முட்டாள்தனமோ... ஏமாற்றுத்தனமோ.. அதேபோல்தான் பெரியார் திடலில் பக்தியை பரப்பும் இயேசு ஜீவிக்கிறார் நிகழ்ச்சிக்கு வாடகைக்கு இடம் கொடுத்துவிட்டு, அவர்கள் போன பின்பு..(கவனிக்கவும்) அவர்கள் போன பின்பு- அய்யோ! மக்களுக்கு பக்தி பரவுகிறதே, மூடநம்பிக்கை பரவுகிறதே! என்று அலறிவிட்டு, பக்தியை ஒழிக்கிறேன் என்னும் பேரால் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடத்துவதும் முட்டாள்தனமான செயலாகும்.

பகுத்தறிவுவாதிகளே! ஆங்காங்கே கூட்டம்போட்டு மக்கள் பக்தி போதையில் அறிவை இழக்கிறார்கள் என்று உரக்க கத்துகிறீர்களே அந்த பக்தி போதை வளர நீங்கள் வாடகைக்கு இடம் கொடுப்பதன் மூலம் ஒரு காரணியாக இருக்கின்றீர்கள் என்பதை மறுக்கமுடியுமா?

தீமிதி நிகழ்ச்சி நடைபெற்றால் அதற்கு மறுநாள் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடத்துவோம் என்று வீரமணி சொல்கிறார் என்றால் அதற்கு என்ன அர்த்தம்? தீமிதி நிகழ்ச்சி நடந்தால் மூடநம்பிக்கை வளர்கிறது. அதனால்தான் நாங்கள் மூடநம்பிக்கை ஒழிப்பு நிகழ்ச்சி நடத்துகிறோம் என்றுதானே அர்த்தம்! பிறகு ஏன் மூடநம்பிக்கை வளர பெரியார் திடலில் முதலில் அனுமதி தரவேண்டும்? தாங்களே அதை வளர்த்துவிட்டு அதை நாங்கள் ஒழிக்கிறோம் பாருங்கள் என்று சொல்வதுதான் பகுத்தறிவா?

எல்லோருக்கும் இடம் கொடுப்பதன்மூலம் ஈ. வே. ராமசாமி நாயக்கரின் பண்பாடு தெரிகிறதாம்! மெமோரியால் ஹால் என்ற கிறிஸ்தவர் இடம் கொடுக்கவில்லை என்றால் அவர் கொள்கையில் வழுவாமல் நிற்கிறார் என்றுதானே பொருள், ஈ. வே. ராமசாமி நாயக்கர் இடம் கொடுக்கிறார் என்றால் அங்கே பண்பாடு எங்கே தெரிகிறது? கொள்கை நழுவல்தானே தெரிகிறது. பண்பாட்டிற்காக

என்றால் இலவசமாக கொடுத்திருக்கலாமே! மாற்றுக் கொள்கை உடையவர்களுக்கு கூட தங்களுடைய இடத்தை இலவசமாக தருகிறார்களே என்று மக்கள் இவர்களை புகழ்ந்திருப்பார்களே! ஆனால் உண்மையில் இது பண்பாட்டிற்காக அல்ல.

பெரியார் திடல் பணத்திற்காகவே!

பணத்திற்காக! பணத்திற்காக மட்டுமே!!

தங்களுடைய இயக்கத்திற்கு பணம் சம்பாதிக்கவே ஈ. வே. ராமசாமி நாயக்கர், பெரியார் திடலை கட்டினார் என்பதுதான் உண்மை. இல்லையென்றால் ஈ. வே. ராமசாமி

நாயக்கருடைய சொந்தப் பணத்தில் இதைக்கட்டியிருக்கலாமே. இதை விட்டுவிட்டு மக்களிடம் பணம் வசூலித்துதானே இந்த மன்றத்தை ஈ. வே. ராமசாமி நாயக்கர் கட்டினார். மக்கள் பணம் தரவில்லை என்றால் இதை கட்டியிருப்பாரா ஈ. வே. ராமசாமி நாயக்கர்? தன்னுடைய சொந்தப் பணத்தில் இதைக் கட்டியிருந்தால் பண்பாட்டிற்காக என்று சொல்லலாம். ஆனால் மக்களிடம் வசூலித்த பணத்தில் கட்டிவிட்டு பண்பாட்டிற்காக கட்டினார் என்று சொன்னால் அதை நம்புவன் முட்டாளாகத்தான் இருப்பான். அதனால்தான் ஈ. வே. ராமசாமி நாயக்கரும் தன்னுடைய இயக்கத்திற்கு முட்டாள்கள்தான் வேண்டும் என்றார். அந்த அழைப்புக்கிணங்கித்தான் வீரமணியும் இயக்கத்தில் சேர்ந்தது. தற்போது ஈ. வே. ராமசாமி நாயக்கர் செய்த முட்டாள்தனமான காரியம் என்றும் தெரிந்தும் அதை பண்பாட்டிற்காக என்று வக்காலத்து வாங்கிக்கொண்டு இருக்கிறார்!

பெரியார் திடலின் நோக்கம் பண்பாடு அல்ல. பணம் என்பதை இவர்கள் வாடகை அதிகமாக வாங்குவதிலிருந்தே நாம் தெரிந்து கொள்ளலாம்.

இதில் இன்னொரு விஷயம்.

பெரியார் திடல் தங்களுடைய கட்சியினுடையது அல்ல என்று வீரமணி கூறுகிறார். அப்படியென்றால் அது யாருடையது? அது யார் கட்டுப்பாட்டின்கீழ் இயங்குகிறது? அதனுடைய தலைவர், செயலாளர் என்பவர்கள் யார்? அந்த வாடகைப் பணம் யார் வசூலிக்கிறார்கள்? இது போன்ற விஷயங்களை வீரமணி சொல்லியிருக்க வேண்டாமா?

இது எங்கள் கட்சியினுடையது அல்ல என்று வீரமணிதான் சொல்கிறாரே தவிர, அதன் உரிமையாளர் அல்லது பெரியார் திடலை நிர்வாகிப்பவர் இது தி.க. வினுடையது அல்ல

என்று இதுவரை ஒரு அறிக்கைக்கூட விட்டதில்லையே ஏன்? பெரியார் திடலை விமர்சிக்கும்போது அதை எதிர்த்து வீரமணி மட்டுமே குரல் கொடுக்கிறாரே தவிர அதனை நிர்வாகிப்பவர் அல்லது அதனுடைய தலைவர் குரல் கொடுத்ததில்லையே ஏன்? பெரியார் திடல் எந்த அமைப்பின்கீழ், யாருடைய கட்டுப்பாட்டின்கீழ் வருகிறது என்று இனிமேலாவது வீரமணியோ அல்லது அதனை நிர்வாகிப்போரோ சொல்வார்களா?

வீரமணி பெரியார் திடல் எங்கள் கட்சியினுடையது அல்ல என்று கூறுகிறார். ஆனால் உண்மை என்ன தெரியுமா?

ஆனைமுத்து

திருச்சி வே. ஆனைமுத்து கூறுகிறார்:-

இயக்க நிதி என்பது ”சுயமரியாதை ஸ்தாபன-திராவிடர் கழக நிதியே ஆகும் என்பதையும் அய்யாவே தெளிவுபடுத்தியிருக்கிறார்.

”சுயமரியாதை இயக்கம், திராவிடர் கழகம் முதலியவற்றிற்குக்கூட பணம் வேண்டுமென்று பத்திரிகையில் போடுவேன்; கழகத் தோழர்கள் வசூல் செய்வார்கள்; அல்லது பொது மக்கள் அனுப்பிக் கொடுப்பார்கள்; அவ்வளவுதான்”(விடுதலை, தலையங்கம் 26-08-1972) அய்யா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

இதன் அடிப்படையில் சென்னை பெரியார் திடல் மனை வாங்கவும், கட்டடங்கள் கட்டவும், ”திராவிடர் கழகக் கட்டட நிதி” என்ற பேரால் தான் கழகத் தோழர்கள் வசூலித்ததும், பொதுமக்களே முன்வந்தும் அய்யாவிடம் ரூபாய் இரண்டரை லட்சம் அளிக்கப்பட்டது.

(நூல்:- பெரியார் கொள்கைக்குக் குழிதோண்டிய திராவிடர் கழகம்)

வே. ஆனைமுத்து சொல்வதன் மூலம் நமக்கு தெரிவதென்ன?

திராவிடர் கழகம் மற்றும் பெரியார் திடல் இரண்டும் ஒன்றுதான் என்பதுதானே!

திராவிடர் கழகம் வேறு, பெரியார் திடல் வேறு என்று வீரமணி சொல்வது பொய்தானே!

மேலும் ஒரு கேள்வி.

இந்து முன்னணியோ, ஆர். எஸ். எஸ். அல்லது விஸ்வ ஹிந்து பரிஷத்தோ நிகழ்ச்சி நடத்த பெரியார் திடலை வாடகைக்குத் தருவார்களா?